# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி

## திருமலையில் ஏழுமலையானின் ஏழை பக்தர்களுக்கு இலவச உணவு வழங்க உங்களுக்கு விருப்பமுள்ளதா?

இந்து சமய இலக்கியங்கள் மற்றும் பல புராணக்கதைகள் ஏழை எளியோர்க்கு வழங்கப்படும் அன்னதான மகிமையைப் பற்றி விளக்கிக் கூறுகின்றன. அதுவும் குறிப்பாகத் திருமலை போன்ற திருத் தலத்தில் இறைவனைத் தரிசிக்க வரும் ஏழை யாத்திரிகர்களுக்கு இலவச உணவு வழங்கப்படுவது சாலச் சிறந்ததாகும். அதுபோலவே இறைவனின் பிரஸாதங்கள் அவனுடைய பக்தர்களுக்கு விநியோகிக்கப்படு வதும் மிகவும் உன்னதமாகவும், வழக்கில் இருந்து வருவதாகவும் கருதப்படுகிறது

இவ்வகையில் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரால் புகுத்தப்பட்ட ''ஸ்ரீவேங்கடேஸ்வரா நித்யபிரஸாத தான அறக்கொடை'' திட்டத்தின் கீழ் நீங்கள், திருமலையில் இறைவனைத் தரிசிக்க வரும் ஏழை யாத்திரிகர்களுக்கு இறைவனின் பிரஸாதங்களான உணவுப் பொட்டலங்கள் அல்லது லட்டுகள் அல்லது வடைகள் ஆகியவற்றை இலவசமாக வழங்கலாம்.

திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்கு ரூ. 500-ஐ முதலில் அறக்கொடையாக வழங்குதல் வேண்டும். இத்தொகையினால் வரும் வருட வட்டித் தொகையினைக்கொண்டு ஒவ்வொரு வருடமும் 20 ஏழை யாத்திரிகர்களுக்கு இலவசமாக உணவு வழங்கப்படும். அல்லது 'க்யூ' வரிசைகளில் வரும் யாத்திரி கர்களுக்கு 15 லட்டுகள் அல்லது 15 வடைகள் பங்கிட்டு வழங்கப்படும்

இவ்இலவச பிரஸாத வழங்கீடு, வருடத்தில் ஒரு நாளின்போது—அது உங்கள் பிறந்த நாளிலோ—திருமண நாளிலோ—உங்கள் பிள்ளை அல்லது மகளுடைய பிறந்த நாளிலோ—உங்கள் தாய் அல்லது தந்தையாரது நினைவு நாளிலோ—அல்லது உங்களுக்கு ஏதேனும் ஒரு வகையில் பிடித்தமான நாளிலோ—நடைபெறும்.

ஒரு நபர் எத்தனை அறக் கொடைகளாவது வழங்கலாம். ஒவ்வொரு அறக்கொடைக்கான இலவச பிரஸாத வழங்கீடு, நீங்கள் விரும்பும் வெவ்வேறு நாளின் போது நடைபெறும். குறைந்தபட்சம் 10 அறக்கொடைகள் வழங்கினால், அறக்கொடை வழங்கிய நபரைச் சார்ந்த 5 நபர்களுக்கு, இலவசப் பிரஸாத வழங்கீட்டு நாளின்போது, இறைவனின் இலவச தரிசன வசதி ஏற்பாடு செய்யப்படும். (இது தற்போது உள்ள 5 சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட்டுகளின் மதிப்பான ரூ. 125-க்கு சமமாகும்)

ஒவ்வொரு அறக்கொடையாளரின் பெயரும் கோத்ரமும், வழங்கீட்டு நாளின் போது கொலு வில் (இறைவனின் முன் நாள்தோறும் நடைபெறும் சபை) வாசிக்கப்படும்.

நீங்கள் அளிக்கும் இவ்அறக்கொடை தொகைகளுக்கு வருமான வரி விலக்கு உண்டு. நீங்கள் உங்களுடைய வருமான வரி கணக்கின் போது இவ் அறக்கொடையினைச் சுட்டிக்காட்டி வரிவிலக்கு பெற லாம். அறக்கொடையாளர்கள், தொகையினை இந்தியாவிலுள்ள ஆந்திர பேங்க் கிளை அலுவலகங்களின் மூலமாகவோ அல்லது தி. தி. வேதவஸ்தானம், திருப்பதி எனும் முகவரியில் 'எக்ஸிக்யூட்டிவ் ஆபீஸர்' எனும் பெயரில் 'டிமாண்ட் டிராப்ஃட்' ஒன்றினை எந்த வங்கி மூலமாவது வாங்கி 'மேனேஜர், ஆந்திரா பேங்க், தி. தி. தேவஸ்தான நிர்வாகக் கட்டிடம், திருப்பதி, 517501' எனும் முகவரிக்கு கீழ்க்காணும் விவரங்களுடன் அனுப்புதல் வேண்டும்.

1. தொகை அனுப்புவோரின் பெயர், முகவரி.
2. பிரஸாத வழங்கீடு யார் பெயரில் செய்யப்படவேண்டுமோ அவருடைய பெயர், முகவரி.
3. யாருக்கு வருமான வரிவிலக்கு சான்றிதழ் வழங்கப்படவேண்டுமோ அவருடைய பெயர், முகவரி.
4. யாருடைய பெயரில் பிரசாத வழங்கீடு நடைபெற வேண்டுமோ அவருடைய கோத்திரம், குடும்பப் பெயர்.
5. பிரஸாத வழங்கீடுக்குரிய நாள்
6. விநியோகிக்கப்படவேண்டிய வகைகள் விவரம் :
   உணவுப் பொட்டலங்கள்/லட்டு/வடை (ஒரு வகை மட்டுமே குறிப்பிடல் வேண்டும்)
7. வழங்கப்பட்டத் தொகை.

விநியோகிக்கப்பட வேண்டிய நாளுக்கு, குறைந்தபட்சம், 15 நாட்களுக்கு முன்பாகவே தொகை அனுப்பப்படல் வேண்டும்.

(ஒம்.) செயலாட்சித் தலைவர்.
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.




கருத்தினுட் கருத்தாய் இருந்துநீ உணர்த்துங்
காரணங் கண்டுசும் மாதான்
வருத்தமற் றிருந்து சுகம்பெறு வண்ணம்
வருந்தினேன் மதியின்மை தீர்ப்பார்
ஒருத்தரார் உளப்பா டுணர்பவர் யாவர்
உலகவர் பன்னெறி எனக்குப்
பொருத்தமோ சொல்லாய் மௌனசற் குருவே
போற்றிநின் பொன்னடிப் போதே.

—தாயுமானார்.



# ஸப்தகிரி





மார்ச் 1981

மலர் 11
இதழ் 10

தனிப்பிரதி 50 காசு

வருடச் சந்தா ரூ. 6

*சிறப்பாசிரியர் :*

திரு. பி. வி. ஆர். கே. பிரசாத், I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*ஆசிரியர் :*

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

*அச்சிடுபவர் :*

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு:
EDITOR
'Sapthagiri'
Alipiri Road,
TIRUPATI-517501.


## உள்ளுறை



*அட்டையில் : உமையொருபாகன் - சித்திரம் : கே. ஜெகதீஷ்.*

ஸப்தகிரியில் வெளியிடப்படும் கட்டுரைகள், கதைகள், கவிதைகள், புகைப்படங்கள் ஆகியவற்றில் காணப்படும் கருத்துக்களுக்கு தி. தி. தேவஸ்தானம் எவ்வகையிலும் பொறுப்பல்ல. ஆ—ர்.

—*—

*சில தவிர்க்க முடியாத காரணங்கள் முன்னிட்டு "திருமாலின் திரு அவதாரங்கள்" என்னும் தொடர் கட்டுரையினை இம்மாத இதழில் வெளியிட முடியவில்லை.*



# செய்திச் சுருக்கம்



**புதிய சத்திரம்**

ஆந்திர மாநிலம் கடப்பா மாவட்டத்தில் கந்திமல்லய்யா காரி பல்லியில் ரூ. 4.5 இலட்சம் செலவில் கட்டப்பட்ட, 20 அறைகளைக் கொண்ட தி. தி. தேவஸ்தானத்தாரின் சத்திரம் ஒன்று தி. தி. தே. மேலாண்மைக்குழு உறுப்பினர் திரு. என். சூர்யபிரகாஷ ராவ் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. இது சம்பந்தப்பட்ட விழா ஒன்று 30-1-81 அன்று நடைபெற்றது. இதற்கு தி. தி. தே. அறக்குழுவின் உறுப்பினரும், கடப்பா சட்டமன்ற உறுப்பினருமான திருமதி. கே. பிரபாவதம்மா அவர்கள் தலைமை வகித்தார்.

**குருடர் செவிடர் பள்ளி**

திருப்பதியில் தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா குருடர் செவிடர்ப் பள்ளிக்கட்டிட ஆரங்கில் பல விஞ்ஞான கருவிகள் கொண்ட அறைகள் சில, முக்கிய அலுவலர்களால் 6-2-81 அன்று திறந்துவைக்கப்பட்டன. அன்று மாலை இவை சம்பந்தப்பட்ட விழாவிற்கு தி. தி. தே. இணைப்புச் செயலாட்சித்தலைவர் தலைமை வகித்தார். விழாவிற்கு வருகை புரிந்தோரை அப்பள்ளியின் முதல்வர் வரவேற்றுப் பேசுகையில் 1974-இல் 16 மாணவர்களுடன் தொடங்கப்பட்ட இப்பள்ளி இன்று 106 மாணவர்களுக்கு (69 மாணவர்கள்; 37 மாணவிகள்) பயிற்சி அளித்து வருகிறது என்று குறிப்பிட்டு, பள்ளிக்குத் தேவையான மேலும் பல உதவிகளைச் செய்தருளுமாறு மேலாண்மையைக் கேட்டுக் கொண்டார். இவ்விழாவிற்குச் சிறப்பு விருந்தினராக ஹைதராபாத் உயர்நிலைப்பள்ளிகளின் இணைப்பு இயக்குநர் திரு. மார்க்கண்டேய சாஸ்திரி அவர்கள் தம் சிறப்புரையில் இப்பள்ளிக்குத் தேவையான கல்விச் சலுகை உதவிகள் புரிய ஆந்திர அரசு என்றும் தயாராக உள்ளது என்று கூறினர். இவ்விழாவில் சித்தூர் மாவட்ட கல்வி அலுவலர் திரு. சஞ்சீவிராவ், திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா ரூயா மருத்துவ மனையின் இ. என். டி. மருத்துவ வல்லுநர் டாக்டர். எம். ஹம்பய்யா, திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தின் பதிவாளர் திரு. பெஞ்சலய்யா, திருப்பதி ரூயா மருத்துவ மனையின் கண்காணிப்பாளர் திரு. சந்திரசேகர சாஸ்திரி மற்றும் தி. தி. தே. உதவி செயலாட்சித்தலைவர் திரு. ஜி. டி. நாயுடு ஆகியோர் பங்கேற்று உரையாற்றினர். பின்னர் பள்ளியில் பணிபுரியும் ஊழியர்களுக்குப் பயிற்சிதரும் வகையில் சான்றிதழ் பயிற்சி படிப்பு துவக்கி வைக்கப்பட்டது. பின்னர் காது கேளாதவர்களுக்கான ஓசைப் பயிற்சிக்கூடம், செவிடர் மருந்தகம், விஞ்ஞான பரிசோதனைக்கூடம், சமையற்கூடம், புத்தகக் கட்டிடக்கூடம் ஆகியன திறந்து வைக்கப்பட்டன.

**உரைக்கோவை**

திருப்பதியில் ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகத்தின் தமிழ்த் துறையின் சார்பில் 'நம்மாழ்வாரும் மாணிக்கவாசகரும்' என்ற பொருள் சம்பந்தப்பட்ட உரைக்கோவைஒன்று 24-1-81 முதல் 26-1-81 வரை மூன்று நாட்களுக்கு நடைபெற்றது. இந்தியாவைச் சேர்ந்த பல்வேறு பல்கலைக்கழகங்கள் மற்றும் கல்லூரிகளைச் சார்ந்த ஆசிரியப் பெருமக்களும், தமிழ் மொழியுடன் நெருங்கிய தொடர்புகொண்ட அறிஞர் பெருமக்களும் மேற்கூறிய சமயக்குரவர்கள் பற்றிய கட்டுரைகளை வாசித்தனர். இவ்உரைக்கோவையினை தமிழ்நாடு இந்துசமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு ஆர் எம். வீரப்பன் அவர்கள் திறந்து வைத்தார். இது சம்பந்தப்பட்ட விழா ஒன்று பல்கலைக்கழக மன்றத்தில் ஏற்பாடு செய்யப்பட்டது. உரைக்கோவைக்கு வருகை புரிந்தோரை தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர். பொன் சௌரிராஜன் அவர்கள் வரவேற்று, வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைவளர்ச்சிக்காக பெரிதும் உழைத்த, துறையின் முன்னுள் பேராசிரியர் டாக்டர். என். சுப்புரெட்டியார் அவர்களின் முயற்சியையும், தமிழ்த்துறை மேலும் வளர மேலும் பல்வேறு முயற்சிகளை மேற்கொண்ட முன்னுள் தமிழ்த்துறையின் தலைவரும், அண்மையில் மறைந்தவருமான டாக்டர். கு. தாமோதரன் அவர்களின் ஊக்கத்தையும் நினைவு கூர்ந்தார். பின்னர் இவ் உரைக்கோவையினை அமைச்சரவர்கள் திறந்துவைத்து உரையாற்றுகையில், பல்வேறு சமயப் பிரிவுகளில் ஈடுபாடு கொண்டோர் ஒற்றுமையில் வேற்றுமை பாராது, வேற்றுமையில் ஒற்றுமை எனும் உணர்வில் சேர்ந்து செயற்பட்டால்தான், பிற்கால சந்ததியினரிடையே அமைதி நிலவும்,

'உரைக் கோவை' திறப்பு விழா மேடையில்



அதனுற்றான் ஆக்கப்பூர்வமான திட்டங்கள் வெற்றியடையும் என்று அறிவுறுத்தி, சமய ஆராய்ச்சியாளர்களின் பங்கு இப்பணியில் மிகவும் அவசியமானது, அவசரமானது என்று கூறினர். பின்னர் இவ்விழாவிற்குச் சிறப்பு விருந்தினராக திரு. ஔவை நடராஜன் அவர்கள் பங்கேற்றுப் பேசுகையில், நம்மாழ்வார் மற்றும் மாணிக்கவாசகர் பாடற் சிறப்புக்களை விளக்கிப் பேசினர். இவ்விழாவிற்குத் தலைமை வகித்துப் பேசிய ஸ்ரீவேங்கடேஸ்வரா பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் டாக்டர். எம். வி. ராமசர்மா அவர்கள், தம் தலைமை உரையில் சமயத்தலைவர்கள் சமயப் புலவர்கள் பல்வேறு மொழிகளில் தங்கள் கருத்துக்களை வெளியிட்டாலும் அவற்றின் பொதுக் கருத்து ஒன்றுதான் என்று கூறி, அதனை மனதிற்கொண்டு சமயக்குரவர்களின் கருத்துரைகளை இன வேறுபாடு இன்றி புரிந்து கொண்டால் வீண் சமயப் பூசல்களுக்கு இடமில்லை என்று கூறி, அவர்தம் பாடல்களின் இலக்கியச்சுவையினைப்பற்றி தெரிந்து கொள்ளுதலும் மிகவும் அவசியமானது என்று கூறினர்.

பின்னர் டாக்டர். நா. சுப்பு ரெட்டியார் அவர்களை, அவர் தமிழ்த் துறைக்காக செய்த நற்தொண்டினைப் பாராட்டும் வகையில் தமிழ்த் துறைச் சார்பில், அமைச்சரவர்கள் பாராட்டி பொன்னுடைப் போர்த்திக் கௌரவித்தார். தமிழ்த்துறை உயர் விரிவுரையாளர் டாக்டர். தேவ சங்கீதம் பின்னர் நன்றி நவின்றார். இவ்விழாவின்போது தமிழ்த்துறை, மறைந்த பேராசிரியர் கு. தாமோதரன் அவர்களின் பெயரில் ரூ. 6000/-க்கான 'உதவிச் சம்பள'த் திட்டம் ஒன்றினை புகுத்த தீர்மானித்தது.

**நாராயண தீர்த்தர் ஆராதனை**

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா கலா பீடத்தின் ஆதரவில் ஸ்ரீ நாராயண தீர்த்தரின் ஆராதனை விழா மேற்கூறிய கலா பீடத்தில் 11-2-81 அன்று வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. அன்று மாலை ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு வருகை புரிந்தோரை, கலா பீடத்தின் சிறப்பு அலுவலர் திரு. பி. ரஜனி காந்தராவ் அவர்கள் வரவேற்றதைத் தொடர்ந்து, ராஜ மண்டரி ஆந்திர கேஸரி நூற்றாண்டு இளநிலைக் கல்லூரியின் முதல்வரும், நாராயண தீர்த்தரின் வழித் தோன்றலுருமான டாக்டர். பதஞ்சலி சாஸ்திரி அவர்கள் சிறப்புரையாற்றினர். பின்னர் ஸ்ரீ அன்னமாச்சார்யா வெளியீட்டுத் துறையின் சிறப்பு அலுவலரான திரு. ஜி. ரா்மகிருஷ்ண சர்மா அவர்களின் உரையைத் தொடர்ந்து, தி. தி. தே. இசை நாட்டியக் கல்லூரியின் விரிவுரையாளரான திரு. எஸ். ஆர். ஜானகி ராமன் அவர்களுடைய கிருஷ்ண லீலா தரங்கணி மீது பாடிய இசை நிகழ்ச்சியும், கலா பீடத்தின் இசைக் குழுவினரின் நிகழ்ச்சியும் நடைபெற்றது.

**பெங்களூர் தகவலறிவிப்புநிலையம்**

28-1-81 அன்று பெங்களூரில், தி. தி. தே, உள்ளூர் ஆலோசனைக் குழுவின் சிறப்புக் கூட்டம் பெங்களூர் தி. தி. தே. தகவலறிவிப்பு நிலையத்தில் நடைபெற்றது. விழாவிற்குத் தலைமை வகித்து உரையாற்றிய தி. தி. தே. மேலாண்மைக் குழு உறுப்பினர் திரு. என். சூர்ய பிரகாஷராவ் அவர்கள், தி. தி தே. சமயம் சம்பந்தப்பட்ட திட்டங்களை மேற்படி ஆலோசனைக் குழு நன்கு செயற்படுத்தி வருகின்றது என்று குறிப்பிட்டு 'ஸ்ரீ வேங்கடேஸ்வரா சங்கம்' எனும் அமைப்பின்கீழ், சேரிவாழ் மக்களை மனதிற் கொண்டு பல சமய நிகழ்ச்சிகளை இக்குழு மேலும் தீவிரமாக செயற்படுத்த வேண்டியது மிகவும் அவசியம் என்று குறிப்பிட்டார்.

**ஸ்ரீ மஹாலக்ஷ்மி லக்ஷார்ச்சனை மஹோத்ஸவம் - திருப்பதி**

ப்ரதி வருஷம் போல் இவ்வருஷமும் நெம். 166, கோவிந்த ராஜன் சன்னதி தெருவில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு லக்ஷார்ச்சனை சிறப்பாக நடைபெற்றது. நிறைவு நாளான 8-2-81 ஞாயிற்றுக்கிழமையன்று ஸ்ரீ உ. வே. வேதவித்வான் கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் தலைமையில் தயாசதக கருத்தரங்கு நடந்தது ஸ்ரீ உ. வே. வித்வான் ஸேவா ஸ்ரீநிவாஸராகவாச்சாரியர் ஸ்வாமி நீண்ட உபந்யாஸத்தின் மூலம் தயாசதகத்தை பலவித கோணங்களில் விளக்கினர். ஸ்ரீ உ. வே. வித்வான்கள் டி.கே. கோபாலஸ்வாமி ஐய்யங்கார் ஸ்வாமி, என். எஸ். ராமாநுஜ தாதாச்சாரியர் ஸ்வாமி, பையம்பாடி வெங்கட வரதாச்சாரிய ஸ்வாமி மற்றும் பலரும் கலந்துகொண்டு கருத்தரங்கைச் சிறப்பித்தனர். விழா இறுதியில் ஸ்ரீ உ. வே. ஸேவா ஸ்வாமி, பட்டு வஸ்திரம்போர்த்தி கௌரவிக்கப் பட்டார். திரளான ஆஸ்திகர்கள் பங்கு பெற்று சிறப்பித்தனர்.

தகவல்: என். எஸ். ராகவன்-திருப்பதி.

அண்மையில் திருப்பதியில் நடைபெற்ற 310வது கீதா ஞான யகஞத்தின்போது சுவாமி சின்மயானந்தா அவர்கள் சிறப்புரையாற்றுகையில்.



# புவனம் பிறந்த நாள்

திரு. எஸ். நடராஜன்
சென்னை.

*சிவாயமென்னும் அட்சரம் சிவனிருக்கும் அட்சரம்*
*உபாயமென்று நம்புவோர்க்கு உண்மையான அட்சரம்*
*கபாடமிட்ட வாயிலை கடந்துபோகும் வாயுவை*
*உபாயமிட்டழைக்குமே சிவாய ஐந்தெழுத்துமே!*
*-சிவ வாக்கியர்.*

சிவராத்திரி என்ற சொல் சிவனுடைய ராத்திரி, சிவமான ராத்திரி, சிவனை அர்ச்சிக்கும் ராத்திரி, சிவனுக்கு இன்பமான ராத்திரி என்ற பலவகைப் பொருளைத் தரும். சிவமான ராத்திரி என்பதே இவைகளில் மிகப் பொருத்தமானது.



ஒருவித வியாபாரமும் இல்லாமல் காடாந்த காரம் சூழ நித்திரை புரியும் காலமே ராத்திரி. முப்பது நாழிகை பகல் என்றால் முப்பது நாழிகை ராத்திரி.

கரணங்கள் மனத்தில் ஒடுங்க, மனம் ஜீவனிலே ஒடுங்க, ஜீவன் ஆத்மாவிலே லயமாகும் காலம் அது. பகலில் அலைந்து திரிந்து சக்தியை இழந்த ஜீவனுக்கு ஆத்ம சக்தியை உண்டுபண்ணுவதே ஸுஷுப்தி.

இது நித்யலயம், அவாந்தரலயம், மஹாப்ரளயம் என்று மூவகை. இவற்றுள் ஸமஸ்த உலகும் லயமாகும் இடம் இறைவன். தங்க நகைகளை அராவி அந்தப் பொடியை மெழுகில் ஒற்றி வைப்பதுபோல் பகவானிடம் சகல ஜீவராசிகளும் லயமாகியிருக்கும். ஸ்ருஷ்டிக்கு முன்பு தன்னிடம் லயமானதைப் படைக்க விரும்பிப் பரமன் லிங்கமாகத் தோன்றும் நாளே சிவராத்திரி. அன்று கருணை வடிவான தேவி நமக்காகச் சிவபூஜை செய்தநாள் சிவராத்திரி ஆகும்.

'சிவம்' என்ற சொல்லுக்கே துன்பத்தைத் துடைக்கவல்லது என்று அர்த்தம். ஒரு சமயம் உமாதேவி விளையாட்டாக ஈசுவரனது கண்களை அவருக்குப் பின்புறமாக வந்து பொத்திவிடுகிறாள். எங்கும் பேரிருள் பரவுகிறது. இந்நிலையில் தேவர்கள் சிவபூஜை செய்த இரவே சிவராத்திரி என்பாரும் உண்டு. அப்பர் சுவாமிகளும்,

தலிமலி மங்கைகங்கை விளையாடி யோடி
நயனத் தலங்கள் காமா உலகினை எழு
முற்றும் இருள்மூட மூட
இருளொடு நெற்றி யொருகண் அவர்தர
வஞ்சிமற்றை நயங் கை விட்டு
மடவாள் இறைஞ்ச மதிபோல் அவர்தரு
சோதி போல
வளர்வித்த முக்கண்
அவனே நமக்கோர் சரணே

என்கிறார். இந்த சிவராத்திரி ஐவகைப்படும். மாசி திங்கள் சதுர்த்தசி கூடிய நாளே மகா சிவராத்திரியாகும்.

சோமவாரம் சூரியோதயம் முதல் அறுபது நாழிகை வரை அமாவாசை திதி இருக்குமாயின் அதுவே யோக சிவராத்திரி எனப்படும்.

ஒருவருடத்திலுள்ள வளர்பிறை தேய்பிறை கூடிய சதுர்த்தசி இருபது நாட்களும் நித்திய சிவராத்திரி என வழங்கப்படும்.

தை மாதம் தேய்பிறை பிரதமை முதல் 13 அல்லது 14 நாட்கள் விரதம் இருந்தால் பட்ச சிவராத்திரி.

ஒவ்வொரு மாதம் வரும் சிவராத்திரி மாத சிவராத்திரி எனப்படும்.

இவ்வுலகில் முக்தியளிக்கக்கூடியது சிவார்ச்சனையும், ருத்திர பாராயணமும். அஷ்டமிசோமவாரம், கிருஷ்ண பட்சம் சதுர்தசி, பிரதோஷம், ஆகிய இம்மூன்று நாளும் உபவாசம் இருந்தால் காசிப்பதியில் மரணம் ஏற்படுவதற்குச் சமம். இவைகளில் சிவராத்திரி விரதமே மிக முக்கியமானது. மேலும், சிவராத்திரி காலமாகிய மாசிமாதத்து கிருஷ்ணபட்ச சதுர்த்தசி அர்த்தராத்திரி பதினான்கு நாழிகையும் கோடி பிரம்மகத்திகளையும் நசிக்கச் செய்திடும் வல்லமையுடையனவாகும்.

இத்தகு சிறப்புடைய சிவராத்திரி விரதத்தை விதிமுறையோடு பின்பற்றவேண்டும். சிவராத்திரி தினத்தின் முன் நாள் ஒருவேளையுண்டு, பரிசுத்த இடத்தில் படுத்துறங்கி, சிவராத்திரியன்று அதிகாலையில் எழுந்திருந்து, புனித நிராடி காலை அனுஷ்டானம் செய்து சிவாலயத்தில் சுவாமி தரிசனம் செய்து நேரே வீட்டிற்குச் செல்லவேண்டும். அங்கு

சிவபெருமானைப் பூஜிக்கும் இடத்தை கோமயத்தில் மெழுகி பொன்னுடையும் பட்டாடையும் மேலே கட்டி, வாழை கரும்புகளை நாட்டி, தோரணங்களையும் மலர் மாலைகளையும் தொடுத்து அலங்கரிக்க வேண்டும்.

பிறகு நடுப்பகலில் நீராடி, உச்சிக் கால அனுஷ்டானமியற்றி, பூஜைக்குரிய பொருள்களைச் சேகரித்து, சூரியன் மறையும் வேளையில் சிவாலயத்தில் கொடுத்து அர்ச்சிக்குமாறு ஏற்பாடு செய்து வரவேண்டும். மீண்டும் ஒருமுறை நீராடி, மாலைக்கால அனுஷ்டானமியற்றி, பொன்னுடைகளால் அலங்கரித்த இடத்தில் சிவ பெருமானைப் பீடத்தில் நிறுவி, சிவ பூஜா விதி தவறாமல், நான்கு ஜாமத்தும், ஜாமத்திற்கு ஒரு முறையாகப் பூஜைசெய்யவேண்டும்.

முதல் ஜாமம் : பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்னும் இவ் ஐந்தும் கலந்த பஞ்சகவ்யத்தில் அபிஷேகம் செய்து, வில்வமும் சாற்றி, தாமரை மலரால் அர்சிக்க வேண்டும். அச்சமயம், பயத்தம் பருப்பு சேர்த்த பொங்கல் நிவேதித்து, தூபதீப ஆராதனைகள் செய்து ருக்வேதமோதி இருகைக்கூப்பி அர்க்கியம்கொடுத்து அஷ்டாங்கமாக வணங்கி வழிபடல் வேண்டும்.

இரண்டாம் ஜாமம் : பஞ்சாமிருதத்தால் அபிஷேகம் செய்து, சந்தனத்துடன் தாமரை மலரும் சாத்தி, துளசியால் அர்சித்து பாயசம் நிவேதித்து யஜுர் வேதமோதி வணங்க வேண்டும்.

மூன்றும் ஜாமம் : தேனால் அபிஷேகம் செய்து, அரைத்த பச்சை கற்பூரத்துடன் ஜாதி முல்லைமலர் சாத்தி, முக்கிளை கூடிய வில்வதளத்தால் அர்சித்து எள் அன்னம் நிவேதித்து சாமவேதமோதி வழிபடல் வேண்டும்.

நான்காம் ஜாமம் : கருப்பஞ் சாற்றினால் அபிஷேகித்து அரைத்த குங்குமப் பூவுடன் நந்தியாவட்டை மலரும் சாற்றி, நீலோற்பல மலரால் அருசித்து, சுத்தஅன்னம் நிவேதித்து, அதர்வண வேதமோதி வழிபடல் வேண்டும்.

இவ்வாறு நான்கு ஜாமத்தும் நித்திரை நீங்கிப் பூஜித்து மறுநாள் அதிகாலையில் புனிதநீராடி அனுஷ்டானமியற்றி, தமது தீட்சா குருவை தியானித்து தக்கவாறு தானம்தந்து, சூரியன் உதித்து ஆறு நாழிகைக்குள் பாரணை செய்யவேண்டும். இவ்வாறு இருபத்துநான்கு வருடம் இவ்விரதம் நோற்றுப் பின் கோதானம், பூதானம், சுவர்ணதானம் முதலியன தந்து விரதத்தை பூர்த்தி செய்வோர் சிவகதி சேர்வர்; அன்னவரின் முன் மூவேழு தலைமுறையினரும் முக்தி எய்துவர்.

சிவனுக்கு உகந்த மந்திரம் "நமசிவாய" என்கிற பஞ்சாட்சர மந்திரம். உலகில் ஐம்பெரும் பூதங்களான பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் இவைகளை இவ்வைந்து எழுத்துக்கள் குறிக்கும்.

"நமசிவாய' என்கிற மந்திரத்தின் அருமையை நாயன்மார்கள் ஆசை தீரப் பாடியிருக்கிறார்கள். அஷ்டாக்ஷர நாமாவான நாராயணவிலுள்ள ரா வையும், நமச்சிவாயவிலுள்ள ம வையும் சேர்த்துதான் ராம என்கிற எழுத்தை உண்டாக்கியிருக்கிறார்கள். நாராயண என்கிற வார்த்தைக்கு 'ரா'வும் நமசிவாய என்கிற வார்த்தைக்கு 'ம' வும் ஜீவ எழுத்துக்கள். அவைகளை நீக்கி இந்நாமங்களைச் சொல்லிப்பாருங்கள்!

# உள்மனத்து நாளும் உணர்

**திரு. டி. நவநீதகிருஷ்ணன்**
மதுரை

வானளாவி யாவிகொள் வான்டுமுகத்தான் பொன்னடியை
தானலம்ப நீபெருக்காய்க் கண்மலரே! — ஊனவுடல்
கொண்டனையே, கொண்டல்நல் வண்ணந்தான் கொண்டிருத்தி
கண்ணீரை யூற்றிடாயே கண்டு

கண்டுகொண்ட வன்சகடம் கண்டுதைத்த பூவடியை
விண்டுகொண்டு நீதொழுவே, வல்லாயோ —உண்டுகொண்ட
நன்மனத்தால் தானினைந்து நீள்பிறவி நீயறுக்க
வன்கரத்தைத் தானெடுப்பாய் வந்து

அந்தரத்து அண்ணலவன்! அண்டர்தம் கோனவன்!
மந்திரத்து மண்டுமவன்! பொன்னடியை—வந்துதிக்கும்
நற்சொல்லால் நீயேத்த நற்றமிழால் பாவெடுத்து
பொற்பதத்தை அண்டிடுவாய் பொன்

பொன்னடியால் பூவளந்து நற்பலியின் ஆவிதனை
கன்னலென தானெடுத்தான் நற்கழலை—இன்னமுதாம்
நாமத்தால் ஏத்துகின்றார், நற்றொண்டர் ஓதோசை
காமத்தால் வன்செவியே கேள்

கேளாயோ, காணாயோ, கூப்பாயோ தாழ்த்தாயோ
வாளாகுங் கூரரவின் வெள்ளுகிரை—பாழாக்கி
ஆயர்நற் பாடியருந் தாந்தொழுவே நின்றானை
நீயெடுப்பாய் உள்மனத்து நாளும்.

## தென்னாட்டுடைய சிவன்

தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி

என்கிறார் மாணிக்கவாசகர்.

தென்னாடுடைய சிவன் என்பதால் சைவ வழிபாடு தென்னாட்டில்தான் தோன்றியிருக்க வேண்டும் என்பதே பல சைவ மக்களின் சித்தாந்தம். அதற்கேற்ப சிவலிங்க வழிபாடும் பொங்கழல் உருவான அண்ணாமலையிலேயே எழுந்திருக்கிறது. அதன் பின்னரே நாடு முழுதும் சிவலிங்கங்கள் தோன்றியிருக்கின்றன என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

## சிவனுக்கு லிங்க உருவம் ஏன்?

நமது ஆலயங்களில் சிவபெருமான் லிங்க ரூபமாகவே காட்சியளிக்கிறார். இது ஏன்?

நம் முன்னோர் அருவ வழிபாடு, உருவ வழிபாடு, அருவுருவ வழிபாடு என்ற மூன்று முறைகளை வகுத்தனர். எந்த உருவமும் இல்லாத இறைவனை மனதில் தியானிக்க ஏதாவது ஒரு மார்க்கம் வேண்டும். உருவத்தை மனதில் தியானித்து வழிபடவே நடராஜர், தட்சிணாமூர்த்தி போன்ற மூர்த்திகள் ஏற்படுத்தப் பட்டுள்ளனர். அவ்வுருவ வழிபாடு—ஒரு சின்னத்தை வழிபடுதல். இவ்வழிபாட்டினருக்கு உதவியாகவே லிங்கம், மகாமேரு, பாதம் போன்றவைகள் ஏற்பட்டிருக்கின்றன. அருவ வழிபாட்டினர் வழிபடுவது வான வெளி—திருச்சிற்றம்பலம். இம்முறையில் வழிபடுபவர்களை முறையே சீலத்தார் நோன்பினர், செறிவினர் என்று அழைக்கப்படுவதுண்டு.

அருவுருவ வழிபாட்டிற்கு லிங்கத்தை ஏற்படுத்துவானேன்? சைவர்கள் மட்டும் லிங்கத்தை வழிபடுவது என்று இன்று இருப்பதுபோல அன்று இல்லை. சிவலிங்கத்தை எல்லோருமே வழிபட்டனர். அதில் சிவம் இருக்கிறது, விஷ்ணு இருக்கிறார், பிரம்மன் இருக்கிறார். எல்லாக் கடவுள்களையும் ஒன்று சேர்த்தே லிங்கம் விளங்குகிறது.

லிங்கத்தின் பீடம் (ஆவுடையார் எனப்படுவது) சக்திரூபம். பாணம் சிவரூபம், பீடம் கிரியாசக்தி வடிவம், லிங்கம் ஞானசக்தி வடிவம். பீடத்தின் அடிபாகம் பிரும்ம ரூபம், நடு பாகம் விஷ்ணு ரூபம்.

இதைத்தான் திருமூலர்

மலர்ந்த அயன் மாலுருத்திரன் மகேசன்
பலந்தரு ஐம்முகன் பரவிந்துநாதம்

நலந்தரு சக்திசிவன் வடிவாகி
பலந்தரு லிங்கம் பராசக்தியாமே

என்கிறார்.

லிங்கம் ஆண் குறியைக் குறிப்பதாக சில வெளிநாட்டினர் குறிப்பிட்டு இம்மாதிரி குறிவழிபாடு மேனாட்டிலும் இருக்கிறதென்று எழுதுகிறார்கள். சிருஷ்டி தத்துவத்தை லிங்கம் உணர்த்துகிறது என்பது உண்மைதான் என்றாலும் ஆண்குறியை வைத்துதான் லிங்கஉரு உருவானதென்று சொல்லப்படுவதற்கு ஆதாரம் எதுவும் இல்லை.

இந்தியாவில் மிகப் பழமையான லிங்கம் (கி. மு. இரண்டாவது நூற்றாண்டு) ஆந்திராவிலுள்ள குடிமல்லம் என்கிற கிராமத்திலுள்ள ஆலயத்தில் உள்ளது.

சிவ என்கிற வார்த்தை எப்படி ஏற்பட்டது ?

ஆரம்ப எழுத்தான சி என்ற எழுத்தைப் பார்த்தால் ச்+இ+அ என்று ஆகிறது. இதில் இயங்கும் எழுத்து 'ச' கரமும் 'இ' கரமும் ஆகும். 'ச'கரம் 'சரண்' என்னும் புகலிடம் குறிக்கும். 'இ' கரம் இவன் என்பதைக் குறிக்கும். 'இவனிடம்தான் நீ சரணடைய வேண்டும்' என்பதை 'சி' உணர்த்துகிறது.

சிவய நம என்ற எழுத்தான 'வ' உயிரைக் குறிப்பது. 'ய' ஆருயிரை குறிப்பிடும் குறிப்பு எழுத்து. 'ந' மறையாற்றலைக் குறிக்கிறது. 'ம' மலம், மாயை, கன்மங்களைக் குறிக்கும்.

உயிர்கள் இறைவனைச் சரண் அடைந்தால் எல்லா கஷ்டங்களும் நீங்கி அவன் அருள் பெறலாம் என்பதே சிவ என்பதின் அர்த்தம்.

ஐந்தெழுத்துடைய இம் மகா மந்திரம் வேதத்தின் நடுவில் காணப்படுகிறது. இதேபோன்று தமிழ் மறையாகிய மூவர் தேவாரத்தின் நடுவேயும் காணப்படுகிறது. 'பழுத்தன ஐந்தும் பழமறையுள்ளே' என்பது திருமூலர் வாக்கு. "வேத நான்கினும் மெய்ப்பொருளாவது" என்று சம்பந்தர் அருளுகிறார்.

பஞ்சாட்சரம், ஈசானம், தத்புருடம், அகோரம் வாமம், சத்யோ ஜாதம் என்னும் பஞ்ச பிரம்ம மந்திரங்களாகிய அவை ஒவ்வொன்றும் இருபத்தைந்தாக, நூற்றிருபத்தைந்து பஞ்சாட்சர மந்திரங்களாக விரிந்துள்ளன. இவற்றின் விரிவெல்லாம் ருத்ரயாமளம், ஆம்நாயம் முதலிய நூல்களில் பரந்து கிடக்கின்றன.

பஞ்சாட்சரம் ஐந்தெழுத்தை யுடையதாயினும் சாதகர்களின் பக்குவத்திற்கு ஏற்ப ஒரு முறையில் ஐந்து வகைகள் கூறப்பட்டுள்ளன. அவை,

ஸ்தூல பஞ்சாட்சரம்—நமசிவய
சூட்சும பஞ்சாட்சரம்—சிவயநம
காரண பஞ்சாட்சரம்—சிவயசிவ
மகா காரண பஞ்சாட்சரம்—சிவ
மகா மனு பஞ்சாட்சரம்—சி

இவ்விஷயங்களை குரு மூலமாகவே தெரிந்துகொள்ளுதல் நியதி.

## திருநீறு பூசுவதேன்

சைவர்களின் (சிவனை வழிபடுபவர்களின்) முக்கிய சின்னம் திருநீறு என்கிற விபூதி. இது பசுவின் மலமாகிய சாணத்தை எரித்து உண்டாக்கப்படுகிறது. ஆதலால் அது பசுக்களாகிய ஆன்மாக்களது மலங்களை நீக்குதலைத் தெரிவிக்கும்.

திருநீறு சாம்பலே. எப்பொருள் அழியினும் தான் அழியாது நிலை பெற்றிருக்கும் அடிநிலைப் பொருளே சாம்பல். எல்லாம் அழியும்போதும் அழியாமல் இருக்கும் இறைவனை அது குறிக்கும்.

திருநீற்றை நெற்றியில் மூன்று கீற்றுகப் பூசிக்கொள்வது ஏன்? அது ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களையும் நீக்கும் குறிப்பைக் காட்டும்.

"மந்திரமாவது நீறு" என்கிற தேவாரப் பதிகத்தில் ஞானசம்பந்தர் "வேதத்தில் உள்ளது நீறு" என்று குறிப்பிடுகிறார். ஜாபாலோப நிடதம் என்கிற உபநிடதம் திருநீற்றின் சிறப்பைத் தனித்தெடுத்துக்கூறுவது. திருநீறு இல்லாத நெற்றியைச் சுடு என்கிறது அது. இதையொட்டியே ஔவையார் "நீறில்லா நெற்றிப் பாழ்" என்றார்.

திருநீறு சிறந்த மருந்தாகவும் பயன் படுகிறது. திருநாவுக்கரசருக்கு ஏற்பட்ட சூலை நோயையும், கூன் பாண்டியனுக்கு ஏற்பட்ட வெப்பு நோயையும் தீர்த்த வரலாறுகள் உள்ளன.

சோழர்கள் திருநீறு அணியாமல் இருந்ததில்லை. முதலாம் குலோத்துங்கச் சோழனுக்கு 'திருநீற்றுச் சோழன்' என்கிற பெயரும் உண்டு.

சொற் கோவும் தோணிபுரத் தோன்றலும் சுந்தரனும்
சிற்கோல வாதவூர் தேசிகனும்—முற்கோலி
வந்திலரேல் நீறு எங்கே ?
மாமறை நூல் தான் எங்கே ?
எந்தைபிரான் ஐந்தெழுத்து எங்கே ?

என்றபடி திருநீறு பரப்பியவர்கள் சைவசமயக் குரவர்களான நால்வரும் பிற நாயன்மார்களுமாவர்.

மாணிக்கவாசகர் ஒரு பதிகத்தில்:

பிணியெல்லாம் வரினும் அஞ்சேன் பிறப்பினோ டிறப்பும் அஞ்சேன்
துணிநிலா அணியினான்றன் தொழும் பரோ டழுந்தி அம்மால்
திணிநிலம் பிளந்தும் காணாச் சேவடி பரவி வெந்நீறு
அணிகிலாதவரைக் கண்டால் அம்ம நாம் அஞ்சுமாறே

என்று பாடுகிறார். எதைக் கண்டாலும் அஞ்சாத மாணிக்க வாசகர் நீறில்லா நெற்றியைக் கண்டால் அஞ்சுகிறாராம்.



# திருவள்ளூர் ஸ்ரீ வீரராகவன்

"நீம் மந்யே ராகவம் வீரம் நாராயணம் அநாமயம்'' என்று ராவணன் சக்ரவர்த்தித் திருமகனை வீரராகவனுகப் புகழ்ந்தான். அவனை நாராயணனுகவே எண்ணுகின்றேன் என்றுன். அவனே (வீராகவனே) பாங்குடன் பெருஞ்சோதியாய்த் திரு எவ்வுள்ளில் கிடந்து அருள் புரிகின் ருன். இப்பெருமாள் சயனத் திருக் கோலத்தில் காட்சியளிப்பது தற் காலத்தில்திருவள்ளூர்என அழைக்கப் படும் திருஎவ்வுள்ளூர் என்ற திவ்ய தேசமாகும். இப்பெருமாளை திரு மழிசை ஆழ்வார் திருமங்கை ஆழ் வார் ஆகிய இரு ஆழ்வார்களும், சிதம்பரம் ராமலிங்க வள்ளலாரும் பாடிப் பரவசம் அடைந்து உள்ளனர்.

## திருமழிசை ஆழ்வார் பாசுரம்:

'' நாகத்தணைக் குடந்தை வெஃகா
திருவெவ்வுள்
நாகத்தணையரங்கம் பேரன்பில்
நாகத்தணைப் பாற்கடல் கிடக்கும்
ஆதிநெடுமால் அணைப்பார்
கருத்தனுவான் ''

## திருமங்கை ஆழ்வார்:

'' காசையாடை மூடியோடிக்
காதல் செய்தானவனூர்
நாசமாக நம்பவல்ல நம்பி நம்
பெருமான்
வேயினன்ன தோள் மடவார்
வெண்ணெயுண்டான் இவனென்று
ஏசநின்ற வெம்பெருமா
னெவ்வுள் கிடந்தானே ''

(என்று தொடங்கும் பத்து பாசுரங் கள்)

உபய நாச்சிமார்களுடன் ஸ்ரீவீரராகவன் (உற்சவமூர்த்தி).



வடலூர் ஸ்ரீராமலிங்க வள்ளலரின் போற்றித்திருபஞ்சகம் என்ற ஐந்து பாடல்களில் ஒன்றைக் காண் போம்;

'' தண்ணமர் மதியே சாந்தமைத்த
சத்துவனே போற்றி!
வண்ணமா மணியே போற்றி!
மணிவண்ணத் தேவா போற்றி!
அண்ணலே! எவ்வுள்ளூரில்
அமர்ந்தருளாதி போற்றி!
விண்ணவர் முதல்வா போற்றி!
வீரராகவனே போற்றி!

இத்தனை விசேஷங்கள் நிறைந்த இத்தலத்திற்குப் புராண ரீதியான பெயர் ''வீக்ஷாரண்யம்'' என்ப

திரு. டி. எஸ். ஜெயராமன்
திருவள்ளூர்.

தாகும். இதன் பெருமையை மார்க் கண்டேய புராணத்தில் காணலாம்.

சென்னைக்கு வடமேற்கில் சுமார் 48 கிலோ மீட்டர் தொலைவில் திருவள்ளூர் என்னும் சிற்றூர், அப் பெயரே உள்ள புகைவண்டி நிலையத் திலிருந்து சுமார் மூன்று கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. ஓங்கி உயர்ந்த கோபுரம் கொண்ட ஸ்ரீவீர ராகவன் ஆலயமும் 'ஹ்ருத்தாப நாசனீ'' என்ற திருக்குளமும் ஊரை அழகு படுத்துகின்றன: வெகு தூரத் தில் வரும் போதே நமது கண்களில் படும் கோபுரம் உள்ளத்திற்கு உவகை ஊட்டுகிறது. அழகிய நீராழி மண்டபத்தை நடுவில் கொண்ட குளமோ மிகப்பெரியது. நல்ல படிக் கட்டுகள் கொண்டது. ஆனல் குளத் தின் நீர்மட்டம் வற்றி நடுவில்நீராழி மண்டபத்தைச்சுற்றி நீர் நிற்கும்நிலை. இந்நிலையும் ஸ்ரீ அஹோபில மடம் 44-வது பட்டம் ஸ்ரீ வேதாந்த தேசிக யதீந்திர மஹா தேசிகன் அவர்களது பெருமைக்கு உரிய திருப்பணியாகும். மிக முக்யத்துவம் வாய்ந்த இக்குளத் தில் மூழ்குவோரின்பாவம்பறந்தோடி விடுகிறது என்று நம்பப்படுகிறது.

கோயிலின் உள் செல்கிறோம். ஓங்கி உயர்ந்த த்வஜஸ்தம்பத்தை

உள்ளங்கை நெல்லிக்கனி என உண ரும் ஆற்றல் படைத்த ஸ்ரீ சாலி ஹோத்ர மஹரிஷி தமது சிஷ்யரான தேவபாக முனிவரும் தமது வாச ஸ்தலமான பதரிகாச்ரமத்தை விட்டு இத்தலம் விழைந்தனர்.''

மார்க்கண்டேயர் மேலும் சொல்லு வார் :-

''ஹ்ருத்தாப நாசனம் என்ற இப் புண்ய தீர்த்தத்தில் மூழ்குபவர் அறிந்து அறியாமல் செய்யும் பாவங் களில் இருந்து விடுபடுகின்றனர். ஸ்நாநம் செய்து ஸ்ரீவீரராகவனுடைய திவ்ய விமானத்தைச் சேவிப்பவர் அனேக ஜன்ம பாவங்களின் பயனுக அநுபவித்துவரும் ஸகலசரீர உபாதை களினின்றும் விடுபடுகின்றனர். அரிஷ்டங்கள் நிவர்த்தி ஆகின்றன. கன்னிகை ஒருவள் தொடர்ந்து ஒரு மாதம் இப்புண்ய தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்து, ஸ்ரீ வீரராகவனைக் சேவித்து வருவாளாகில், அவள் ஸகல வழிகளிலும் சிறந்த கணவனை அடைந்து நல்வாழ்வு வாழ்கிருள். அதுபோல் செய்யும் புத்ர பாக்ய மற்ற தம்பதிகளுக்கும், தேஜோமய மான புத்ரஸந்தானம் உண்டாகிறது. ப்ரம்மச்சாரிகளும் தகுந்த மனைவி யரை அடைந்து மகிழ்கின்றனர்.

மது, கைடபர் என்ற இரு அசுரர் கள் திருமாலிடம் நடத்திய யுத்தத் தில் தோற்றனர். பின் மது என்ற அசுரன் சிறிது ஓய்வுக்குப்பின் பகவானிடம் மறுபடியும் யுத்தத் திற்கு வந்தான். கருடனை முதலில் தன் கதையால் அடித்தான். இதனுல் பெருமாள் தனது சுதர்சன சக்கரத் தை அவன் மீது ஏவினுர். சக்கரத் தின் சக்திக்குப் பயந்து மது, கைடபர் இருவரும் தங்களை ரக்ஷித்துக்கொள்ள இவ்வீக்ஷாரண்யத்தை அடைந்தனர். இங்கு அவர்கள் பெருமானின் சக்ராயு தத்தினுல் ஸம்ஹரிக்கப் பட்டனர். மது, கைடபர் ஸம்ஹாரத்திற்குப் பிறகு ''வீரசயனம்'' தோற்றத் திருமால், ''ஸ்ரீ வீரராகவனுக'' வீக்ஷாரண்ய க்ஷேத்திரத்தில் எழுந் தருளியிருக்கிருர்.

ஸ்ரீ வீரராகவன் இங்கு இவ்வாறு சயனித்திருக்கையில் ஒருதினம் ஒரு ராக்ஷஸன் பசியின் காரணமாக ஸ்ரீ வீரராகவனையே தனக்குக் கிடைத்த ஆகாரமாக நினைத்துப் புசிக்கும் நோக்கத்துடன் வந்தான். பெருமா ளுடைய ஆக்ஞையால் திருக்கோயி லில் இருந்து புறப்பட்ட ஒரு திவ்ய புருஷன் அவ்வசுரனைச் சம்மட்டியால் அடித்துக் கொன்றுன். இவ்வசுர னுடைய சூக்கும உடலை எடுத்துப் போக யமதூதர்கள் முற்பட்டபோது இறைவனுடைய விஷ்ணு தூதர்கள் வந்து யமதூதர்களை தடுத்து அவனை வைகுந்தத்திற்கு அழைத்துச்சென்று விட்டனர், மஹாபாபியான அவ னுக்கு வைகுந்தம் கிட்டியது இந்த க்ஷேத்திரத்தில் பகவானுல் அவனுக்கு முடிவு ஏற்பட்டதினுல் தான் என்பது அறியற்பாலது.''

**எவ்வுள் கிடந்தான் என்ற பெயர் வரக் காரணம் :**

பத்ரிகாச்ரமத்தில் இருந்த சாலி ஹோத்ர மஹரிஷி மோட்சத்தை

ஸ்ரீ கனகவல்லித் தாயார்.



அடைய நிச்சயித்து, அங்கிருந்து புறப்பட்டு வீக்ஷாரண்யம் வந்து சேர்ந்தார். அன்று தை மாத அமாவாஸ்யை தினம். ஹ்ருத்தாப நாசன புண்ய தீர்த்தத்தில் ப்ரும்மாதி தேவர்களும், அப்ஸரஸ்களும், மஹரிஷிகளும் ஸ்நாநம் செய்துகொண்டிருந்ததைப் பார்த்து, சாலிஹோத்ரர் ஆனந்த பரவசராகி, அத்தீர்த்தத்தில் நீராடி, மௌனம் சங்கல்பித்துக் கொண்டு ஒரு வருட காலம் உபாஸமிருந்து தவம்செய்து வந்தார். மறு வருட தை அமாவாஸ்யையன்று உபவாஸத்தை முடித்துப் பாராயணம் பண்ணவேண்டி உணவு தயாரித்து பகவதாராதனத்திற்குப் பிறகு அதிதிக்காக ஒரு பாகம் ஆகாரத்தை ஒதுக்கி வைத்து அதிதியை எதிர் நோக்கியிருந்தார். அப்பொழுது பெருமாள் ஒரு விருத்த ப்ராமண ரிஷி உருவில் வந்து, ஆகாரம் முழுவதையும் யாசித்து உண்டு சென்று விட்டார்.

சாலிஹோத்ர மகரிஷி மறுபடியும் முன்போல் ஆகாரமின்றி மௌனத்துடன் ஒரு வருடம் தவம் செய்தார். மறுவருடம் தை அமாவாஸ்யை தினம் முன்போல் பாரணைக்கு ஏற்பாடுகளைச் செய்து பகவதாராதனத்திற்குப் பிறகு அதிதியை எதிர்நோக்கிக் காத்திருந்தார். பகவான் மறுபடியும் ஒரு வயதானவராக வந்து ஆகாரம் முழுவதையும் யாசித்து உண்டு, அதன்பிறகு "முனிவரே எந்த இடத்தில் (எவ்வுள்ளில்) நான் ஸுகமாகத் தூங்கலாம்?" என்று கேட்டார். முனிவர் தம் இருக்கையையே அவருக்கு அளித்து அவரது பக்கத்தில் விநயத்துடன் எழுந்தருளி இருந்தார். அச்சமயம் ஸ்ரீமந் நாராயணன் தனது அஸாதாரண ரூபத்தை மஹரிஷிக்குக் காண்பித்தார். ஆதிசேஷ சயனத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீமந் நாராயணன் மகரிஷிக்கு வரமளிக்க முன் வந்து கேட்டபோது, பகவானுடைய ஸாயுஜ்யத்தை அடைய விரும்புவதாக விஞ்ஞாபித்தார். தேஹாவஸானத்தில் அவ்விதமே தந்தருளுகிறோம் என்று அருளிச்செய்து பகவான் மஹரிஷியின் சிரஸில் தன் வலது கையை வைத்தருளினார். அன்று முதல் வீக்ஷாரண்யம் 'கிம்க்ரஹம்'(எவ்வுள்) என்றும், பகவான் 'கிம் க்ரஹாதிபதி" (எவ்வுள் கிடந்தான்) என்றும் அழைக்கப்படலாயிற்று.

## வஸுமதி பரிணயம்

இத்தலத்தில் திலீப மஹாராஜனுடைய வம்ச வழி வந்த தர்மஸேனன் என்ற க்ஷத்திரியனுக்கு வஸுமதி என்ற பெண் இருந்தாள். தங்கவிக்ரஹம் போன்ற அவள் மஹா குணவதியாகவுமிருந்தாள். இவளுக்கு மணப்பருவம் வரவே தர்மஸேனன் தனது மகள் யாரை மணக்க விரும்புகிறுளோ? அவருக்கே அவளை மண முடித்து வைக்க உறுதி கொண்டார்.

ஒரு தினம், பூக்கொய்யச் சென்ற போது, "வஸுமதி ஹ்ருத்தாப நாசினியின்" கரையில் ஒரு சௌந்தர்யமும் கம்பீரமும் நிறைந்த யௌவன புருஷனைக் கண்டு, அவன் மீது காதல் கொண்டு, அவனையே தனது கணவனாக அடைய ஆசை கொண்டாள். அந்த யுவனும், அங்கிருந்த ஒரு தோழிப் பெண் மூலம், இக்கன்னிகை தர்மஸேன மஹாராஜனுடைய குமாரி என்று அறிந்து, வஸுமதியிடம் சென்று தான் அவளையே மணந்து கொள்ள விரும்புவதாகச் சொன்னான். இதற்குப் பதிலென வஸுமதி அந்த ராஜகுமாரனைப் பார்த்து, தனது தந்தையின் உத்தரவு பெற்றுத் தன்னை மணந்து கொள்ளுமாறும் அதற்குமுன் ஸ்ரீ வீரராகவப்பெருமாளை ஆராதித்து அனுக்ரஹம் பெறும்படியும் சொன்னாள். அந்த ராஜகுமாரன் வஸுமதியிடம், அவள் தனக்கு மனைவியாவதில் அவளுக்கு இஷ்டம் இருக்குமானால் அதற்கு ஸ்ரீ வீரராகவனால் விக்ன மெதுவும் ஏற்படாது என்ற உறுதியும் அளித்தான். இது கேட்ட வஸுமதி மனம் மகிழ்ந்து, ஒரு ப்ராமணன் மூலம் தன் தந்தையிடம் இதைப்பற்றி சொன்னாள், தர்மஸேனனும் வஸுமதி அனுப்பிய விருத்தாந்தங்களைக் கேட்டு ருத்விக், புரோஹித, ஆச்சார்யர்களான அனேக ப்ராம்மணர்களுடனும், மந்திரிகளுடனும் அந்த ராஜகுமாரனிடம் வந்தார். அவனது குலம், கோத்திரம் யாவையும் விசாரித்து நின்றார். அதற்கு அந்த யுவன் தனக்கு எல்லாவிடமும் சொந்தமென்றும், எல்லாப் பெயர்களும் தன்னையே குறிக்குமென்றும், தர்ம ஸேனனது புதல்வியைத் தான் மணந்தால், பிறகு தானும் இந்த ஊரிலேயே தங்கிவிட விருப்பமுள்ளவனாக இருப்பதாகவும் கூறினான். இது இங்கு அரவணைப் பள்ளிமேல் துயில்கொள்ளும் பெருமாள் மேல் ஆணை என்றான். இதைக் கேட்ட தர்மஸேன மஹாராஜன் மன மகிழ்ந்து, இந்த க்ஷேத்திரத்திலேயே சிறந்த முறையில் மந்திர பூர்வமாக தனது குமாரியாகிய வஸுமதியை அந்த இளைஞனுக்கே பாணிக்ரஹணம் செய்து கொடுத்து அனேக வெகுமதிகளையும் அளித்தார். விவாகம் முடிந்து அந்த இளைஞன் வஸுமதியுடன் ஸ்ரீ வீரராகவனை ஸேவிக்கிறவர்போல் கோயிலினுட் சென்று, எல்லோரும் பார்த்துக் கொண்டு இருக்கும் சமயம் வஸுமதியின் வலது கையைத் தனது வலது கையாற் பிடித்து அழைத்துக் கொண்டு பெருமாளருகே சென்று பாம்பணையின் மீதேறி தனது ரூபத்தையும் மறைத்துவிட்டு அங்கு பிராட்டியாரும் வீரராகவனுமாய் காட்சியளிக்கவே, தர்மஸேன மஹாராஜனும் மற்றோரும் ஆனந்தக் கடலில் மூழ்கினர்." வஸுமதியே சீதாப் பிராட்டியின் மறுஅவதாரம் என்பதும் ஆன்றோர் கூற்று.

மார்க்கண்டேயரின் கட்டளைப்படி ஸஹஸ்ரானீக மஹாராஜனும் இத்தலத்திற்கு வந்து பெருமாளின் அனுக்ரஹம் பெற்று மேன்மை அடைந்தான்.

எனவே இத்தலம் கலியில் நமக்கேற்படும் எல்லாவித துர்பிக்ஷங்களையும் விலக்கும் வரப்ரஸாதம்கொண்ட ஒரு திவ்ய ஸ்தலம். இவ்வாலயம் ஸ்ரீஅஹோபில மடத்தின் நிர்வாகத்திற்கு உட்பட்டது. மிகச் சீரிய முறையில் இறைவன் பக்தர்களால் வழிபடப்பட்டு அனுக்ரஹிக்கிறான். திருப்பதி போன்று இத்தலத்திலும் பிரார்த்தனையாக "முடி எடுத்தல்" பிரஸித்தம். வேண்டும் வரம் வேண்டியாங்கு அருட்செய்யும் ஸ்ரீவீரராகவனைப் பணிந்து இன்புறுவோமாக.



# ஆலயமும் வழிபாடும்

## மானிடப் பிறவியின் மாண்பு

"தொல்லை நம் பிறவி யெண்ணில்
தொடுகடல் மணலும் ஆற்ரு எல்லைய"

எனச் சிந்தாமணி நூல் கூறுகின்றது. எண்ணிலாப் பிறவிகளில் தோன்றித் துன்பம் துய்த்துப் பின்னர்ப் புண்ணிய வசத்தால் பெறுதற்கரிய இம் மானிடப் பிறவியைப் பெற்றுள்ளோம். இதனாலன்றோ,

"அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல்
அரிது."

என அவ்வைப் பெருமாட்டியும்,

"வாய்த்தது நம் தமக்கு ஈதோர் பிறவி
மதித்திடுமின்."

என அப்பர் அடிகளும் சிறக்கக் கூறியுள்ளார்கள்.

மற்றும்,

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகிமுனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித்தாவர சங்கமத்து
ளெல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே
னெம்பெருமான்."

என எண்ணிலாப் பிறவிகளிலுழன்று மிகப் புண்ணிய வசத்தினால் கிடைத்த இம்மானிடப் பிறவியின் அருமையைக் கூறுகிறார் மாணிக்க வாசகப் பெருமான்.

ஜீவ தத்துவத்தில் மேலான நிலையை அடைந்துள்ளவன் மனிதன். ஓரறிவினின்று ஆறறிவை அரும் பெரும் புண்ணிய வசத்தால் அடையப் பெற்று வந்துள்ளவன் மானிடன். பரம்பொருளை நோக்கி நீண்டதொரு யாத்திரை செய்யும் பல்கோடி உயிர்களுள் மிக முன்னணியில் இருப்பவன் மானுடன். எனவே இம் மானிடப் பிறவியில் தான் இறைவனை அறிய, அடைய பெரும் வாய்ப்பு கிடைத்துள்ளது. நாம் இவ்வுலகில் மானிடராகப் பிறந்தது ஆத்ம லாபம் பெறுவதற்காக என்பதை ஒரு பொழுதும் மறந்துவிடலாகாது.

எனவே "வீடு பெற நில்" எனும் அவ்வையின் அமுதமொழியைக் கடைப்பிடித்து, வாழ்த்த வாயும், நினைக்க நெஞ்சும், தாழ்த்த சென்னியையும் தந்தத் தலைவனைத் தூயோமாய்த் தூமலர்த் தூவித் தொழுது, வாயினாற்பாடி மனத்தினாற்சிந்தித்து, காயத்தாற் வணங்கி வழிபடுதலே பெறற்கரிய இம்மானிடப் பிறவியைப் பெற்றதின் மாண்பாகும்.

## ஆத்ம ஞானமும் ஆலயத்தோற்றமும்

மாதவத்தோரும் மாமுனிவோரும் பற்பல காலங்களில், பற்பல இடங்களில், பற்பல நெறிகளில், தூய அற வழியிற் நின்று, ஞானப் பொலிவுடன் வாழ்ந்து வந்தனர். அன்னோரது புனித உள்ளத்தே உதித்த ஞான ஒளி கதிரொளி போன்று உலகெங்கும் பரவி அருளொளி வழங்கலாயின. அப்புண்ணியப் புருஷர்கள் வாசம் பண்ணின ஸ்தலங்கள் தெய்வீகத் திருவருள் தோய்ந்தப் புண்ணிய க்ஷேத்திரங்களாகப் பொலிவுற்று விளங்கலாயின.

"ஈசாவாஸ்ய மிதம் ஸர்வம்" எனும் ஈசாவாஸ்ய உபநிஷதத்தின் தத்துவத்தையும், மற்றும், "அந்தர் பஹிஸ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: பர: ஸ்தித:" எனும் நாராயண ஸூக்தத்தின் பேருண்மையையும், "அவனே யவனு மவனு மவனும், அவனே மற்றெல்லாமும் அறிந்தனமே" எனும் நம்மாழ்வாரின் தெய்வீகத் திருவாக்கின் உண்மைக் கருத்தினையும் நமது பாரத நாடு, ஆதி காலந்தொட்டே அறிந்திருந்தது.

எனவே, வேத காலத்தில் வாழ்ந்த தபோதனர்கள் ஆரண்யங்களில் சூரியனையும், விண்ணையும், மண்ணையும், மலையையும், நதிகளையும், மரங்களையும் தொழுது வந்தனர். இயற்கையின் எழிலில் இறைவனைக் கண்டனர். காண்பதெல்லாம் கடவுள் சொரூபம் எனும் உண்மையை உணர்த்தினர்: மற்றும்,

"ஆயுர் யஜ்ஞேன கல்பதாம்
ப்ராணோ யஜ்ஞேன கல்பதாம்
அபானோ யஜ்ஞேன கல்பதாம்
வ்யானோ யஜ்ஞேன கல்பதாம்
சக்ஷுர் யஜ்ஞேன கல்பதாம்
ஸ்ரோத்ரம் யஜ்ஞேன கல்பதாம்
மனோ யஜ்ஞேன கல்பதாம்
வாக் யஜ்ஞேன கல்பதாம்
ஆத்மா யஜ்ஞேன கல்பதாம்
யஜ்ஞோ யஜ்ஞேன கல்பதாம்."

எனும் யஜுர்வேதத்தின் தலை சிறந்த பகுதியாகக் கருதப்படும் ஸ்ரீருத்ரத்தின் மந்திரங்களின் பேருண்மையைச் சிறக்க உணர்ந்திருந்த அம்மகரிஷிகள் வேள்வித் தீயை வளர்த்தும் இறைவனை வழிபட்டு வந்தனர்.

அவ்வாறு அம்மகான்கள் வதிந்து வழிபட்டு வந்த ஆரண்யங்கள் தபோவனங்களாயின; நதிகளும் நதி திரங்களும் புண்ணிய தீர்த்தங்களாகவும் புண்ணிய ஸ்தலங்களாகவும் பரிணமித்தன; வழிபட்ட மரங்கள் ஸ்தல விருக்ஷங்களாகத் திகழ்ந்தன; வேள்விக் குண்டங்கள் வழிபடு தெய்வீகக் குண்டங்களாக விளங்கின. நாளடையில் மலைகளைக் குடைந்தும் அவைகளின் உச்சியிலும் ஆலயங்கள் தோற்றுவிக்கப்பட்டன.

*சித்தாந்தி இ. சம்பந்தாச்சாரி,*
*கோவில்பதாகை.*

"நூலறிவின் பயன் வாலறிவன் நற்றாள் தொழுதலே," "தெய்வ ஒளி தனையே தேடு பிறவெல்லாம் கை நழுவுங் காலத்திலே" எனும் அமுத மொழிகளின் உயரி கருத்துக்களை உள்ளக் குறிக்கோளாகக் கொண்டு ஆத்ம ஞானிகளாகத் திகழ்ந்த நம் ஆன்றோர்கள் மனித குலம் பேரின்பப் பெருநிலையை அடைய, ஆன்மா லயப்பட, தெய்வீக அருள் சுரக்கும் நிலையங்களான ஆலயங்களைத் தோற்றுவித்தனர்.

## ஆதியும் அந்தமும் ஆலயமாகக் கொண்ட நாடு:

உலகிற்குப் பாரமார்த்திக ஞான ஒளியைப் பரப்பிய பழம் பெரும் பெருமை நமது பாரத நாட்டின் தனிச்சிறப்பாகும். ஆன்ம வழிபாட்

டிற் சிறந்து விளங்குவது நம் பாரத நாடாகும். ஆன்மா லயப்பட அதிக ஆலயங்கள் நிறைந்து விளங்குவது நமது புண்ணிய நாடு. நம் பாரத நாட்டின் எல்லைகளாகத் திகழ்வது ஆலயங்கள்தான். வடக்கே கயிலை நாதன் கோவில்; தெற்கே கன்னியா குமரி அன்னையின் கோவில்; கிழக்கே காம ரூபம்; மேற்கே சோம நாதம். ஒரு எல்லையைச் சிவமும் மற்றொரு எல்லையைச் சக்தியுமாக ஆட்கொண் டுள்ளனர். பாரத நாடு திருக் கோவில்களை எல்லைகளாகக் கொண்டு விளங்கும் தெய்வீகத் திருநாடாகும்.

### தேவாலயமும் சரீராலயமும் :

நம் நாட்டிலுள்ள பழம்பெருங் கோயில்களெல்லாம் வேத காலத் திற்குப் பிறகு தோன்றியவைகளே யாகும். அவைகள் ஆகம ரீதியில் சிற்ப சாஸ்திரப் பிரமாணங்களுடன் நிர்மாணிக்கப்பட்டவையாகும். இவ் வாறு நிர்மாணிக்கப்பட்ட ஆலயங் கள் மானிட தேகமாகிய சரீராலயத் தின் புறச்சின்ன தத்துவார்த்த விளங்கங்களாகவே உள்ளன.

ஆலயங்களுள் மிகச் சிறந்தது என்று மகரிஷிகளாலும் ஆன்றோர் களாலும் ஏற்றுக்கொள்ளப்படுவது நமது மானிட சரீரமேயாகும். இதனை,

''உள்ளம் பெருங் கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளா மணி விளக்கே.''

எனும் திருமூலர் வாக்கு நன்கு விளக்குகின்றது. அங்கிங்கெனாதபடி யெங்கும் நிறைந்துள்ள இறைவன் சிறப்பாக மானிட சரீரத்தில் அமர்ந் துள்ளான். பொய்யான உடம்பை ''மெய்'' என்று பெயரிட்டழைப் பதின் கருத்து உடம்பினுள்ளே மெய்ப்பொருள் இருத்தலினாற்றான் என்பது நன்கு விளங்குகின்றது. இவ் வுண்மையை,

''உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண் டானென்று
உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே.''

என்கிறார் மகான் திருமூலர். இவ் வுயரிய தத்துவத்தைப் பாமரர்களும் அறிந்துப் பயன் பெறுமாறு, நம் சரீ ரத்திலுள்ள தத்துவங்களின் நல் விளக்கமாக நமது ஆலயங்கள் அமைக்கப்பட்டுள்ளன. எனவே தேவாலயம் எனப்படுவது சரீராலயத் தின் புறச்சின்னமே யாகும். இவ் வாறு புறச் சின்னங்களாக விளங்கும் ஆலயங்கள் மூல அமைப்பிற்கு ஒத் திருத்தல் அவசியமாதலால், அவை களை எவ்வெவ் முறையில் அமைக்க வேண்டுமென்று ஆகமங்கள் வலி யுறுத்துகின்றன.

### ஆகமமும் ஆலய அமைப்பும் :

ஆகம ரீதியில் சிற்ப சாஸ்திரப் பிரமாணங்களுடன் அமைக்கப்படும் ஆலயங்களின் பொதுவான முக்கிய அம்சங்கள் கீழ்வருமாறு :

ராஜகோபுரம்; துவாரம்,
பிராகாரம்
துவஜஸ்தம்பம்
பலிபீடம்
வாஹன பீடம் (வாஹனம்)
மஹா மண்டபம்
அர்த்த மண்டபம்
அந்தராளம்
கெற்பக்கிருஹம்

கெற்பக்கிருஹத்தில் மூல பிம்ப மும், மற்று கோஷ்ட தேவதைகளும், பிராகாரத்தில் பரிவார தேவதை களும், துவாரத்தில் துவாரபாலகர் அமைக்கப் பெற்று ஆலயங்கள் விளங்கும். பிராகாரத்தின் வெளிப் புறத்திலே தீர்த்தமும் (திருக்குள மும்) அமைந்திருக்கும். இத்தகு அமைப்பில் சிற்பங்கள் சிறந்து நிறைந்து தெய்வீகப் பொலிவுடன் சமயத்தின் சின்னமாக விளங்குவது ஆலயம் என்பதை நமது வேதாக மங்கள் விளக்குகின்றன.

### ஆலய அமைப்பும் ஆன்மீக தத்துவமும் :

பரம்பொருள் ஸகுணமாயும், நிர்க்குணமாயும் உள்ளது. நாம் ஸகுண வடிவத்தில் இறைவனை ஆல யத்தில் வணங்குகின்றோம். சூரிய ஒளி எங்கும் வியாபித்திருப்பினும், கண்ணாடி அல்லது மெருகிட்ட உலோகம் இவைகளில் அது நன்கு பிரதிபலிக்கின்றது. அதுபோன்று எங்கும் இறைவன் நிறைந்துள் ளான் எனினும் அவனது அருட்சக்தி மகாத்மாக்களால் தோற்றுவிக்கப் பட்ட ஆலயங்களில் நிறைந்து ததும் பித்திகழ்கின்றன. எனவே ஆலய வழிபாட்டின் மூலம் ஆன்மா லயப் படுகின்றது. ஆலயம் (ஆ+லயம்) என்னும் சொல்லுக்கு ஆன்மா பரம்பொருளில் லயித்தல் என்று பொருள். இனி நமது ஆலய வழி பாட்டு முறைக்கும், சிறப்பானமுறை யில் சிறப்பாக அமையப் பெற்றுள்ள ஆலயங்களின் அம்சங்கட்கும் உள்ள அடிப்படை ஆன்மீகத் தத்துவங் களைச் சற்று ஆராய்வோம்.

### ஆலயத் தீர்த்தம் (திருக்குளம்) :

''நீராடி நிமலனைப் போற்று'' என்பதும், ''ஸ்நாத்வா கர்மாணி குர் வீத'' என்பதுவும் ஆன்றோர் வாக்கு கள். ஸ்நானம் செய்த பிறகே சகல வைதீக கர்மாக்களைச் செய்தல் வேண்டும்; தெய்வ வழிபாடு செய் தல் வேண்டும் என்றே சாஸ்திரங்கள் இயம்புகின்றன. எனவே ஆலய வழி பாட்டிற்குச் செல்லும் பக்தன் முதற் கண் தீர்த்த புஷ்கரணி என வழங்கும் ஆலயத் திருக்குளத்தில் நீராடுவதால் உடலிலுள்ள புற அழுக்கை (மும் மலத்தை) ஆலயத்திற்குள் சென்று ஆண்டவனை வணங்கி அவனருளால் போக்குதல் வேண்டும்.

'' மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர்
வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க் கும் பராபரமே.''

எனும் தாயுமான சுவாமிகளின் அருள்வாக்கு இதனைத் தெளிவு படுத்துகின்றது.

### ராஜகோபுரம் - துவாரம்; பிராகாரம் :

ஆலயத்தின் புற மதிற்சுவர் 'பிரா காரம்' எனப்படும். இது நெடிது உயர்ந்து உறுதியான கோட்டை மதிற்சுவர் போன்று அமைந்திருக் கும். அகில லோகங்கட்கும் நாயகனாக விளங்குபவர் ஆண்டவர். அவர் அமர்ந்திருக்கும் கோவில் கோட்டை போன்ற மதிற்சுவர்களையுடையது மிகப் பொருத்தமேயாகும்.

பிராகாரத்திற்குப் பிரதான வாயிலாக விளங்குவது, சிகரங்களுடன் கூடிய நெடிதுயர்ந்த மிகப் பெரிய கோபுரமாகும். இதன் வாயில் ராஜ கோபுர வாயில் எனப்படும். நெடிதுயர்ந்து சிற்பங்கள் சிறக்கக் கம்பீரமாகக் காக்ஷி அளிக்கும் இக்கோபுரம் நெடுந்தொலைவில் உள்ள மாந்தர்கட்கும் தெய்வ நினைப்பையூட்டுவிக்கும் மாண்புடையது.

ராஜகோபுரஅமைப்புபெரும்பாலும் ஏழு நிலைகளை (சப்த தள விமானங்களை) கொண்டதாகும். இது யோக சாஸ்திரத்திற் கூறப்படும் ஏழுநிலைகளைக் (மூலாதாரம் முதல் ஸஹஸ்ராரம் வரை) குறிக்கும். ராஜ கோபுர அமைப்பைக் கூர்ந்து கவனிக்குங்கால் பிரபஞ்ச சிருஷ்டியில் உள்ளவைகளெல்லாம் பெரும்பாலும் இடம் பெற்று விளங்குவதைக் காணலாம். கீழ் நிலையினின்று மேல் நிலைக்குச் செல்லச் செல்ல நாம ரூப வர்ண பேதங்கள் யாவும் குறைந்தும் மறைந்தும் முடிவில் ஒளி மயமான சிகரங்கள் மட்டும் காட்சி அளிக்கின்றன. இது மாந்தரின் மனப் பக்குவத்தை யெடுத்துக் காட்டுகின்றது. கீழ் நிலையில் அதாவது கீழான உள்ளத்தியல்புடைய மாந்தருக்கு நாம ரூப வர்ண பேதங்களும், மேல் நிலையில் அதாவது மேலான உள்ளத்தியல்புடைய சான்றோருக்கு நாம ரூப வர்ண பேதமற்ற சமதர்சனமாகவும் உலகம் காட்சியளிக்கும் என்பதாகும். அத்தகு சான்றோர் உள்ளத்தே இறைவன் ஜோதி சொரூபமாகத் துலங்குகின்றான் என்பதை ராஜ கோபுரதரிசனம் நன்கு விளக்குகின்றது. இதனை,

"சோதியாய்த் தோன்றுமுருவே
யருவா மொருவனே சொல்லதற்கரிய
வாதியே நடுவே யந்தமே பந்த
மறுக்குமானந்தமா கடலே"

எனும் மாணிக்க வாசகரின் மணிமொழியும்,

"தீப மங்கள ஜோதி நமோ நம"

எனும் அருணகிரிநாதரின் அருள் வாக்கும்,

"தத் ஸவிதுர் வரேண்யம்
பர்கோ தேவஸ்ய திமஹி
தியோயோநஃ ப்ரசோதயாத்"

எனும் தலைசிறந்த மூன்று வேதங்களின் சாரமாயுள்ள "காயத்ரீ" மந்திரமும் தெள்ளென விளக்குகின்றன.

### துவஜஸ்தம்பம் :

ராஜ கோபுர வாயிலாக உள்ளே சென்றதும் அடுத்திருப்பது "துவஜஸ்தம்பம்". சிவாலயங்களில் சம்பந்தப்பட்டவைகளில் இவ்விதம் அமைந்திருக்கும். ஆனால் விஷ்ணுவாலயங்களில் சம்பந்தப்பட்டவைகளில் "பலிபீடம்" முதலிலும் அதற்கடுத்தாற் போல் துவஜஸ்தம்பமும் காட்சியளிக்கும்.

அரசனுக்குரிய சின்னங்களில் மிக முக்கியத்துவம் வாய்ந்தது. 'கொடி' (துவஜம்) அவ்வாறே அகில அண்டங்கட்கும் நாயகனாகிய இறைவனுக்கும் துவஜஸ்தம்பம் ஆலயத்தில் அமைந்துள்ளது மிகப் பொருத்தமே. இது உள்முகமாக இறைவனை நோக்கிய வண்ணமாக அமைந்துள்ளது. இத்துவஜஸ்தம்பத்தின் முன் ஒரு முகப் பட்டவுள்ளத்துடன் உறுதியோடு




கார்கொண்ட புண்ணியத்தால் காமதிப்பால் மங்களஞ்செய்
தார்மதியே றப்புனைந்த சாத்துகண்யன் சீர்வஞ்சி
யன்னவனைப் பாகார்த்தா ஞங்கருள்வான் மாவிடையோன்
தென்காசி யத்தனையே செப்பு

-தென்காசி சிவாலயத்தில் எழுதப்பட்டுள்ளதை அனுப்பியவர்:
திரு. கெ. கி. சத்தியநாராயணன் — கோயம்புத்தூர்-1

வெற்றிக் கொடியென நின்று, இறைவனை நோக்கி கரங்கள் சிரமேற் கூப்பித் தொழுது ஆன்மீகப் பெருநிலையில் வெள்ளி பெறப்பிரார்த்தித்தல் வேண்டும் என்பதை இத்துவஜஸ்தம்பத்தின் தத்துவம் விளக்குகின்றது. மற்றும் இறைவனை வலம்வர வேண்டிய முறையையும் இது விளக்குகின்றது. ஆலயத்தில் பிராகாரத்திற்குள் சுற்றும் பொழுது ஆலயத்திற்குள்ளிருக்கும் தெய்வம் தனது வலப்பக்கம் இருக்குமாறு சுற்றி வரல் வேண்டும். இக்காரணத்தினுல்தான் இதற்கு 'வலம் வருதல்' எனும் பெயர் உண்டாயிற்று. ஸ்தூல சரீரத்தின் செயலான வலம் வருதல் எனும் நிகழ்ச்சி சூட்சும சரீரத்தின் கண் நிகழும் பிராணுயாமத்தின் புறச்சின்ன தத்துவமாகும்.

**பலிபீடம்:**

துவஜஸ்தம்பத்திற்கு அடுத்து இருப்பது "பலிபீடம்". இங்கு வந்ததும் தனது கீழ்மையான புல்லியல்புகளைத் தான் பலியிட்டதாக உறுதியான உள்ளத்துடன் சங்கல்பித்துக் கொண்டு வீழ்ந்து வணங்கி எழுதல் வேண்டும். அவ்வாறு செய்வதின் தத்துவம் புல்லியல்புகளையுடைய தான் அவைகளைத் துறந்ததாகவும் நல்லியல்புகளைக் கொண்ட நன் மனிதனுக மாறியமைந்து எழுந்துள்ள தாகவும் கருத்து. இதனை,

" துள்ளுமறி யாமனது பலிகொடுத்
தேன்கர்ம
துஷ்டதே வதைகளில்லை
துரியநிறை சாந்ததே வதையா
முனக்கே
தொழும்பனன் பபிஷேகநீர்
உள்ளுறையி லென்னுவி
நைவேத்தியம் ப்ராண
னேங்குமதி துாபதீபம்
ஒருகால மன்றிது சதாகால பூசையா
வொப்புவித்தேன் கருணைகூர்! "

எனும், தாயுமான சுவாமிகளின் திருப்பாடல் இதனை விளக்குவதால் நன்குணரலாம்.

**வாஹன பீடம் (வாஹனம்):**

பலிபீடத்திற்கு அடுத்து இருப்பது கெற்பக்கிருஹத்தில் எழுந்தருளியுள்ள தெய்வத்தின் வாஹனம். வாஹன பீடத்தின் மேல் அமர்ந்து தெய்வத்தை நோக்கிய வண்ணமாக உள்ளதாகும். இந்த வாஹனம் ஜீவாத்மனைக் குறிப்பதாகும். அந்தர்முக நோக்குடன் கடவுள் நாட்டத்திலேயே லயித்து நிலைத்திருந்து பரமாத்மனை அடைதலே ஜீவாத்மனின் குறிக்கோளென்பதை இவ்வாஹனம் விளக்கிக் கொண்டிருக்கின்றது.

" அந்தர்முக ஸமாராத்யா
பஹிர்முக ஸுதுர்லபா "

எனும் லலிதா ஸஹஸ்ரநாம வாக்கியமும்,

" ப்ரணவோ தனு: ஸரோஹ்யாத்மா
ப்ரஹ்ம தல்லக்ஷ்ய முச்யதே|
அப்ரமத்தேன வேத்தவ்யம்
ஸாவத்தன்மயோ பவேத்|| "

எனும் முண்டகோபநிஷத் வாக்கியமும் விளக்கும் தத்துவங்கட்கு ஆலயத்திலுள்ள இவ்வாஹன அமைப்பும் பொருத்தமாக அமைந்துள்ளது என்பதாம்.

**மஹாமண்டபம்:**

வாஹன பீடத்தையடுத்து அமைந்திருப்பது 'மஹா மண்டபம்'. இங்கு பக்தகோடிகள் அனைவரும், தத்தம் வேற்றுமைகளை மறந்து, பகவானையே தம் உள்ளக் குறிக்கோளாகக் கொண்டு, உள்ளத்தால் ஒன்றுபட்டவராய்ப் பக்திப் பேரானந்தம்ததும்ப ஒன்று குழுமிக் காட்சி யளிக்கின்றனர்.

" நாஸ்தி தேஷு ஜாதிவித்யாரூப
குல தன க்ரியாதி பேத: "

எனும் நாரத பக்தி ஸூத்திரம் இதற்குப் பிரமாணமாக விளங்குகின்றது.

**அர்த்த மண்டபம்:**

மஹாமண்டபத்தோடு இணைந்து அடுத்திருப்பது அர்த்த மண்டபம். இதுவிஸ்தாரத்தில்சிறியதாகவிளங்கி நாடியப் பொருளைக் கூட்டுவிக்கும் ஸ்தானமாக அமைந்துள்ளது. கெற்பக்ருஹத்தில் உள்ள தெய்வத்தை பக்தர்கள் இங்கு நின்று தரிசனம் செய்வதற்கு இது ஏற்றதாகஉள்ளது. அம்மண்டபத்தில் பக்தர்கள் ஒழுங்குற இணைந்து, இயைந்து ஜீவபோதம் ஒடுங்கிய நிலையில் தெய்வத்தை வணங்கி வேண்டுதலால் இம்மண்டபம் அர்த்தன (வேண்டுதல்) மண்டபமாகவும் காட்சியளிக்கின்றது.

**அந்தராளம்:**

கெற்பக்கிருஹத்திற்கும் அர்த்த மண்டபத்திற்கும் நடுவிலுள்ள பாகம் அந்தராளம். இது கெற்பக்கிருஹத்தைவிட ஒடுங்கியுள்ளதாகும். சிரசு போன்ற பிரதானம் வகிக்கும் கெற்பக்கிருஹத்திற்குக் கழுத்து போன்று விளங்குவது 'அந்தராளம்'. யோக சாதனத்தில் 'விசுத்தி' நிலைபோன்ற ஸ்தானம் இது. இங்கு உட்புறத்தில் தெய்வத்தின் முன்னுலுள்ள திரைக் காட்சி அளிக்கும். இத்திரை நம் மனத்தேயுள்ள மாயையாகிய திரையைப் பிரதிபலிப்பதாகும்.

"மாயா சகமிலையேன் மற்றெனக்கோர் பற்றுமிலை நீயே நானென்று வந்து நிற்பேன் பராபரமே" எனும் தாயுமானுரின் அருள்வாக்கு சிந்திக் கற்பாலது.

**கெற்பக்கிருஹம்:**

அந்தராளத்திற்கு அடுத்துள்ளது "கெற்பக்கிருஹம்"எனும்மூலாலயம். இங்குதான் பக்தகோடிகள் வழிபடும் தெய்வம் எழுந்துள்ளது. தெய்வத்தின் திருவுருவம் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள இக்கெற்பக்கிருஹத்திற்கு சிறிய கோபுரம் (விமானம்) உண்டு. பெரும்பாலும் இதற்குச் சிகரம் ஒன்றே. கெற்பக்கிருஹம் மூல விக்கிரஹத்திற்குத் தகுந்த சிற்பாகமப் பிரமாணப்படி சிறியதாகவே அமைந்திருக்கும். இது பெரும்பான்மை சூரிய வெளிச்சமும் காற்றும் அற்ற இருள் சூழ்ந்ததாக

(24-ம் பக்கம் பார்க்க)



# கதிரவனையே நிறுத்திய காரிகை!

[மனித மனத்தின் ஆற்றல் அளவிடற்கரியது. அதிலும், மிகுந்த கவனத்துடன் நெறிப்படுத்தப்பட்ட மனம் எதை விரும்பினாலும் அது நிகழ்கிறது. எப்படி? குறிப்பிட்டதோர் எண்ணத்தை அல்லது ஆசையை அடி மனத்திற்கு மாற்றுவதே பிரார்த்தனையின் அடிப்படையாகும்; அடி மனம் திடமாக நம்புவது நிகழ்ந்து விடுகிறது. கற்பு நெறியினால் இயற்கை நிகழ்ச்சிகளையும் கட்டுப்படுத்தவல்ல மாதரசிகள் தோன்றிய பெருமை உடையது நமது பாரத நாடு. 'குலமகட்கு அழகு கொழுநனைப் பேணுதல்' என்பதற்கு இலக்கணமாக, அவர்களுள் தனிச் சிறப்புடன் விளங்கிய நளாயினியின் கதை கற்பின் வலிமையை எடுத்துக் காட்டுவது, நமது நெஞ்சத்தை நெகிழவும் வைப்பதாகும்.]

நளாயனனின் அருமைப் புதல்வி நளாயினி. அறிவும் அழகும் ஒருங்கே பொருந்தியஆரணங்கு. தந்தையினால் செல்வமாக வளர்க்கப்பட்டவள். இல்லறத்தின் மாண்பைச் சிறு வயதிலிருந்தே கேட்டறிந்தவள். பெண் குலத்திற்கே எடுத்துக் காட்டாக வாழ உறுதி பூண்டவள்.

நளாயினி மணப் பருவத்தை அடைந்தாள். மௌத்கல்யர் என்னும் மாமுனிவர் நளாயனனிடம் வந்து, அவன் மகளைத் தமக்கு மணம் புரிந்து தருமாறு கோரினார். நளாயினி இசையவே அவள் முனிவரின் துணைவி ஆனாள்.

நளாயினியின் சிறப்பை உலகிற்கு எடுத்துக் காட்ட விரும்பிய மௌத்கல்யர் கடினமானதொரு சோதனையை மேற்கொண்டார். பெரு வியாதியினால் பீடிக்கப்பட்டவராக மாறினார். இல்லறத்திலே அப்போது தான் அடியெடுத்து வைத்திருந்த அம்மெல்லி நல்லாள் அதனால் சிறிதேனும் அருவருப்படையாமல், கணவனுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளை இன்முகத்துடன் செய்து வந்தாள். முனிவரின் நோயின் கடுமை அதிகமாயிற்று. அப்படியும் அவள் மனம் சிறிதேனும் கோணவில்லை; மகிழ்ச்சியுடன் அவரைக் கவனித்துக் கொண்டாள்.

மௌத்கல்யர் தாம் தீர்த்த யாத்திரை செய்ய விரும்புவதாக நளாயினிடம் ஒரு நாள் கூறினார். நளாயினியும் புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவதனால் நோய் குணமாகும் என்று கூறி, பெரிதும் நலிவுற்றிருந்த அவரை ஒரு பிரம்புக் கூடையில் வைத்துத் தலையில் தூக்கிக் கொண்டு ஒவ்வொரு தீர்த்தத்திற்கும் சென்று அவருக்கு அதில் ஸ்னானம் செய்து வைத்தாள். செல்லுமிடங்களில் எல்லாம் அவருக்குச் சுவையுடன் கூடிய

" மானஸி "

உணவு சமைத்து, அவர் சாப்பிட்ட பிறகு அதே இலையில் உண்டு வந்தாள். முற்றிய நிலையிலுள்ள பெரு வியாதியின் காரணமாக அவர் உண்ணும்போது அவர் உடலிலிருந்து துர் நாற்றம் நிறைந்த ஊனீர் பெருகி நிற்கும். ஆயினும், கணவனையே கண் கண்ட தெய்வமாகக் கருதிய அம் மங்கை நல்லாள் அதனால் ஒரு நாளும் கலக்க மடைந்ததில்லை. எதற்கும் மனம் தானே காரணம்! மனத்தை தன் வசமாக்கிக் கொண்டிருந்தாள் அம்மங்கை.

முனிவர் தமது சோதனையை மேலும்தீவிரமாக்கத்தீர்மானித்தார். மனைவியை அருகில் அழைத்து "நளாயினி! என்னால் உனக்கு மிகுந்த சிரமமே தவிர சுகம் ஏதுமில்லை. சகிக்க முடியாத கொடிய நோயினால் வருந்தும் எனக்கு எவ்வளவோ அன்புடனும் பரிவுடனும் பணிவிடை செய்து வருகிறாய். ஆயினும் எனக்கு ஓர் ஆசை. அதைத் தெரிந்து கொண்டால் உனக்கு என்மீது வெறுப்பு ஏற்பட்டாலும் வியப்பு இல்லை," என்று தயக்கத்துடன் கூறினார்.

நளாயினியோ "ஏன் அப்படிச் சொல்லுகிறீர்கள்! உங்களால் எனக்கு என்ன சிரமம்! என்னை மணம் செய்து கொண்ட பின்னரே உங்களுக்கு இந்தக் கொடிய நோய் ஏற்பட்டது. எனவே, இதற்குக்காரணம் என் வினைப் பயனே ஆகும். எனது பிரார்த்தனை வீண் போகாது என்பதில் எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருக்கிறது. புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவதாலும் புண்ணியத் தலங்களைத் தரிசிப்பதாலும் இந்நோயிலிருந்து உங்களுக்குப் பூரண குணம் கட்டாயம் உண்டாகும். ஒரு போதும் உங்கள்மீது எனக்கு வெறுப்பு ஏற்படாது. அதிருக்கட்டும், உங்கள் ஆசையை என்னிடம் கூற ஏன் தயக்கம்! என்னிடம் நம்பிக்கை இல்லையா? எதுவாயிருந்தாலும் நிச்சயமாக அதை நிறைவேற்றி வைக்கிறேன்" என்று கனிவுடன் மொழிந்தாள்.

மனைவியின் அன்பு நிறைந்த சொற்களினால் நெகிழ்வுற்ற முனிவர் தம் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு "நேற்று நதியில் நீராடிவிட்டு வரும் போது கோவிலுக்கருகில் அழகிய பெண் ஒருத்தியைக் கண்டேன். அவள் பால் என் மனம் சென்றது. நோயாளியான என்னுடன் இருப்பதற்கு அவள் சம்மதிப்பாளா என்பது சந்தேகமே. ஆயினும் என் ஆசையை அடக்க முடியவில்லை. அவளை நான் சந்திப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்." என்று மனைவி

யின் முகத்தை நேரடியாகப் பார்க்காமல் கூறினார்.

பொதுவாக, ஒரு பெண் எதை வேண்டுமானாலும் உற்றாருடன் பகிர்ந்து கொள்வாளே தவிர, தன் கணவனை இன்னொரு பெண்ணுடன் பகிர்ந்து கொள்வதற்கு மட்டும் ஒரு போதும் ஒப்பமாட்டாள். அம்மனப் போக்கு நியாயமானதும் கூட. ஆனால், கணவன் மனம் எவ்வகையிலும் வருந்தக்கூடாது என்பதையே ஒரு நோன்பாக ஏற்றுக் கொண்டிருந்த நளாயினியோ செயற்கரிய அத் தியாகத்தையும் செய்யத்தயங்கவில்லை. முனிவரிடம் ''அப்படியே முயற்சி செய்கிறேன்'' என மொழிந்து, அப்பெண்ணைத் தேடிச் சென்றாள்.

முனிவரின் மனைவியின் தேசு மிகுந்த முகத்தைக் கண்ட அப்பெண்மணி அவளை வரவேற்று உபசரித்தாள். முனிவரின் விருப்பத்தை அறிந்த அப் பெண்மணி நளாயினியிடம் "அம்மா! நான் இவ்வூர்க் கோயிலைச் சேர்ந்த பணிப்பெண். பொதுமகளிர் எனப்படும் வகுப்பைச் சேர்ந்தவளே ஆயினும், அவர்கள் செய்யும் இழி தொழிலில் இதுவரை ஈடுபடவில்லை...'' இதைக் கேட்ட நளாயினி இடைமறித்து, தன் கணவனின் கோரிக்கையை நிறைவேற்றப் பலவாறாக அவளைக் கெஞ்சினாள். விசித்திரமாக விளங்கும் மனைவியான நளாயினியின் முகத்தில் தேங்கிய ஏக்கத்தைக் கவனித்த அப்பெண் "அம்மா! பெண்மையின் ஒப்பற்றதொரு வடிவமாக நீங்கள் காட்சியளிக்கிறீர்கள். உங்களுக்காகவே உங்கள் கணவரின் விருப்பத்தைப் பூர்த்தி செய்ய இசைகிறேன்'' என்று கூறினாள்.

நளாயினி கணவனைக் கூடையில் வைத்து அப்பெண்ணின் வீட்டிற்குத் தூக்கிவந்தாள். மௌத்கல்யர், மறுநாள் காலை வந்து தம்மைஅழைத்துச் செல்லும்படி நளாயினியிடம் கூறினார்.

நளாயினி திரும்பியதும் முனிவர் அழகிய உருவமுள்ளவராக அப்பெண்ணின் வீட்டினுள் சென்றார்! அப்பெண்ணுக்கு வியப்பு மட்டுமல்ல, ஒருவகை அச்சமும் ஏற்பட்டது. அதைக் கண்ணுற்ற மௌத்கல்யர் ''பெண்ணே! நீ சிறிதும் பயப்பட வேண்டாம். உன் விருப்பத்திற்கு எதிராக எதுவும் நடந்து விடாது. என் மனைவியின் கற்பின் வலிமையைச் சோதிப்பதற்காகவே இவ்வாறான விருப்பத்தை வெளியிட்டேன். உன் குலத்தொழிலை வெறுத்து நற்பண்புடன் வாழ்வதற்கு முயலும் உன் மனத்திட்பத்துக்கு என் ஆசிகள். ஆனால், இந்த ரகசியத்தை மட்டும் வெளியிடாதே'' என்று சொல்லித் தனியாகவே படுத்துக் கொண்டார்.

மறுநாள் விடியற்காலை நளாயினி வந்தபோது பழைய நோயாளி உருவிலேயே முனிவர் இருந்தார். இவ்வாறு சில நாட்கள் சென்றன. நளாயினியின் முகத்தைக் கவனித்த முனிவர் அது சலனமற்று இருந்ததைக் கண்டு உள்ளூர மகிழ்ச்சி அடைந்தார்.

ஒருநாள் மாலை நன்றாக இருட்டி விட்டது. முனிவர் நாளாயினியை விரைவுபடுத்தவே, அவள் அவரைத் தூக்கிக் கொண்டு குறுக்கு வழியில் ஓட்டமும் நடையுமாகச் செல்லத் தொடங்கினாள். இருட்டில் வழியும் தெளிவாகத் தெரியவில்லை. கணவர் அமர்ந்திருந்த கூடை ஏதோ ஒன்றின் மேல் மோதியதை உணர்ந்தாள்; அதைத் தொடர்ந்து ஓர் ஆள் வலியினால் கத்துவது கேட்டது. உடனே நின்று கண்களை விரித்து, சற்றே கூர்ந்து நோக்கியபோது கழுமரத்தில் ஒரு முனிவர் இருப்பது தெரிந்தது. மாண்டவ்யர் என்னும் அம்முனிவர் மிகுந்த சினத்துடன், ''பெண்ணே! எதிரில் இருப்பதைச் சரியாகக் கவனிக்காமல் அவ்வளவு விரைவாகச் செல்லும் நீ யார்? உன் தலைமீதிருக்கும் கூடை மோதியதால் எனக்கு ஏற்கனவே இருக்கும் வலி இன்னும் அதிகமாகிவிட்டதே'' என்று சொல்லியதும், நளாயினி அவரைக்கைகூப்பி வணங்கித் தன்னை


*Statement about ownership and other particulars about*

## SAPTHAGIRI (MONTHLY)

FORM IV
( *See Rule* 8)

| | | | |
|---|---|---|---|
| 1 | Place of publication | ... | TIRUPATI. |
| 2 | Periodicity of its publication | ... | Monthly |
| 3 | Honorary Editor | ... | Sri P. V. R. K. PRASAD, I.A.S. Executive officer, T.T.D |
| 4 | Printer's Name | ... | Sri M. Vijayakumar Reddy |
| | (Whether citizen of India ) | ... | Yes |
| | Address | ... | Manager, T.T.D. Printing Press, Tirupati. |
| 5 | Editor & Publisher's Name | ... | K. Subba Rao, M.A., |
| | (Whether citizen of India ) | ... | Yes |
| | Address | | Editor, T.T.D. Sapthagiri Journal, Tirupati. |
| 6 | Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital. | ... ... | Board of Trustees represented by the Executive Officer on behalf of T. T. D., Tirupati. |

*I, K. Subba Rao, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

TIRUPATI,
*Date*: 28-2-1981.

(*Sd.*) K. SUBBA RAO,
*Signature of the Publisher.*

மன்னிக்கும்படி பணிவுடன் கேட்டுக் கொண்டாள். ஆனால் வலியின் வேதனை தாங்காது துடித்த மாண்டவ்யர் கோபம் குறையாமல் 'பெண்ணே! உனக்கு உன் நோயாளிக் கணவனின் சுகமே முக்கியமானதாகத் தோன்றுகிறது. நான் படும் துயரம் உனக்குப் புரியவில்லை அல்லவா! சூரியன் உதித்தவுடன் உன் மங்கலத்திற்குக் காரணமான புருஷனை இழப்பாய்!'' என்று சாபமிட்டார். நளாயினி எவ்வளவோ வினயத்துடன் முனிவரிடம் மன்றாடினாள். ஆனால், மாண்டவ்யரோ அவளுடைய முறையீட்டிற்குச் செவிசாய்க்கவில்லை.

நளாயினியின் பொறுமையும் எல்லை மீறியது. ''முனிவரே! எவ்வளவு பணிவுடன் நான் வேண்டினாலும் என் கோரிக்கையை நீங்கள் ஏற்கவில்லை. எனக்கு என் கணவரே எல்லாம். எனக்கு அவர்தாம் அகில உலகமும் ஆவார். எனவே, நான் எனது கற்பு நெறியிலிருந்து சிறிதேனும் வழுவாமல் இருப்பது உண்மையானால், சூரியனே உதிக்காமல் இருக்க வேண்டும்'' என்று எதிர் ஆணையிட்டாள்.

மறுநாள் கதிரவன் கீழ்த்திசையில் உதிக்கவே இல்லை. அன்றாட உலக அலுவல்கள் தடைப்பட்டன. மக்கள் செய்வதறியாது கலங்கினர். இரவு நளாயினியும் அவள் கணவரும் வராததனால் கோயில் பணிப்பெண் அவர்களைத் தேடத் தொடங்கினாள்.

இதற்கிடையில் சூரியன் உதிக்காததனால் கவலையடைந்த தேவர்கள் பிரம்மாவிடம் சென்று நித்திய கர்மாக்கள் நடைபெறவில்லை என்று முறையிட்டனர். நளாயினியின் சாபத்தைப்பற்றிப் பிரம்மா அவர்களுக்கு எடுத்துக்கூறி, அவர்களுடன் நாளாயினிடம் வந்தார். செய்தியறிந்து அங்கு வந்த முனிவர்களும் தேவர்களும் மாண்டவ்யரையும் நளாயினியையும் எவ்வளவோ சமாதானப்படுத்த முயன்றனர். பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் ஆகிய மூவரையுமே தனது கற்பின் சிறப்பினால் குழந்தைகளாக்கிய அருந்ததியும் அங்கு வந்து நளாயினிக்கு நன்மொழிகள் பல கூறி, அவளுடைய மங்கல வாழ்விற்கு ஒரு கெடுதலும் ஏற்படாதிருக்கத் தான் உறுதி கூறுவதாகச் சொன்னாள். மாண்டவ்யரும் தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கித் தமது சாபத்தை நீக்கினார். நளாயினியும் பொழுது விடியுமாறு கூறினாள்.

அப்போது கோயில் பணிப்பெண் மௌத்கல்யரிடம் வந்து ''தவத்தில் சிறந்த பெரியவரே! உங்கள் அனுமதியுடன் என் வீட்டில் நடந்ததைத் தங்கள் மனைவிக்கும் மற்றோருக்கும் சொல்ல விரும்புகிறேன்'' என்று சொன்னவுடன், முனிவரின் முகத்தில் இளநகை அரும்பியது. அதையே அவருடைய அனுமதியாக எடுத்துக் கொண்டு அப்பெண் தொடர்ந்தாள்: ''அம்மா! உங்களுடைய கணவரைப் பற்றி உங்களிடமே சொல்வதற்கு என்னை மன்னிக்கவும். அவர் கொடிய நோயினால் பீடிக்கப்பட்டுள்ளவர் போல் தோன்றினாலும், அவர் அழகில் சிறந்தவர். அது மட்டுமில்லை, குணத்திலும் உயர்ந்தவர். என் இல்லத்தில் அவர் தமது அழகிய உருவத்துடனேயே தங்கினார். மேலும், தங்கள் பெருமையை உலகிற்கு எடுத்துக் காட்டுவதற்காகவே தங்களைச் சோதிக்கும் பொருட்டு நோயாளியாக நடித்து வருவதாகச் சொல்லி, என் வீட்டில் தனியாகவே படுத்துக்கொண்ட உத்தமர்.'' ''முனிவர் பெருமானே! இப்போதேனும்தங்கள் சோதனை முடிந்ததா? எல்லோராலும் வணங்கத்தக்க தங்கள் மனைவிக்குத் தங்கள் சுய உருவைக்காட்டி மகிழ்விக்க வேண்டும்'' என்று கோரினாள் அவள்.

இதைக்கேட்டு நளாயினிக்கு ஒரு புறம் வியப்பும் மறுபுறம் மகிழ்ச்சியும் ஏற்பட்டன. மௌத்கல்யர் நளாயினியின் அருகில் வந்து அழகிய தோற்றமுடையவராய் மாறி ''நளாயினி! உன் கற்பின் உயர்வை உலகிற்கு எடுத்துக் காட்டுவதற்காகவே நான் இவ்வாறு நடந்து கொண்டேன். எனது சோதனையில் நீயே புடமிட்ட பொன்னாக விளங்குகிறாய். உன்னை வாழ்க்கைத் துணையாக அடைந்தது என் மாபெரும் பாக்கியம். உனக்குத் துயரம் விளைவித்ததற்காக என்னை மன்னித்துவிடு' என்று அவளை அன்புடன் அரவணைத்துத் தேற்றினார். நளாயினியின் முகம் நாணத்தினால் சிவந்தது, அவள் உள்ளம் மகிழ்ச்சியினால் பூரித்தது.

இலட்சிய தம்பதியராய் விளங்கும் அவ்விருவரையும் தேவர்களும் முனிவர்களும் பாராட்டினர். அந்நாட்டின் அரசனும் அனைத்து விவரங்களையும் அறிந்து அவர்களுக்கும் கோயில் பணிப் பெண்ணுக்கும் எல்லா வசதிகளும் செய்து கொடுத்து, மௌத்கல்யரையும் நளாயினியையும் வணங்கிச் சென்றான். ★

## பள்ளிக்கூடம்

SCHOOL ஸ்கூல் என்ற எளிய வார்த்தையில் எவ்வளவு பெரிய தத்துவங்கள் பொதிந்து விளங்குகிறது என்பதை உணரலாம்.

வாழ்க்கைப் பள்ளிக்கு இந்த தத்துவம் எப்படி மனித இனங்களை மேம்படுத்துகிறது என்பதை அறியலாம்.

S என்பது Sincerity - உண்மை
C என்பது Conduct - ஒழுக்கம்
H என்பது Honesty - யோக்கியதை
O என்பது Order - ஒழுங்கு
O என்பது Oedience - கீழ்ப்படிதல்
L என்பது Learning - கற்றுக்கொள்ளல்

இந்த தத்துவங்களை பள்ளிக் கூடத்தை தவிர வேறு எங்கு கற்க முடியும்?

தகவல்: கே. ஏ. சிதம்பரம்.
பொள்ளாச்சி-2

# சிறுவர் சோலை

## வினு - விடை

பாலதாஸன் - சூர்யனுர்கோயில்.

1) பாஞ்சராத்ரம், வைகானஸம் விளக்குக.

2) ஆதிசங்கரரால் ஸ்தாபிக்கப்பட்ட "ஸ்ரீ சாரதா பீடம்" எங்கு உள்ளது ?

3) ப்ரபத்தி மார்க்கத்தைக் கடைபிடித்து முக்தி யடைந்த ஆழ்வாரின் பெயர் என்ன ?

4) மத்வ மத ஸ்தாபகரின் பெயர் என்ன ?

5) மத்வர்கள் வழிபடும் தெய்வமான பகவான் கிருஷ்ணன் எங்கு கோவில் கொண்டுள்ளார் ?

6) விஜயவாடாவில் உள்ள துர்க்கையின் ஆலயத்தில் அம்பாளுக்கு என்ன பெயர் ?

7) காலனைக் காலால் உதைத்துத் தன்னைச் சரணடைந்த மார்க்கண்டேயனைக் காப்பாற்றிய சிவபெருமான் இந்தத் திருவிளையாடலை எந்த ஊரில் நடத்தினுர் ?

8) திருஞான சம்பந்தர் பிறந்த ஊர் எது ?

9) மஹாராஷ்டிரத்தில் உள்ள பூனே என்னும் நகரை அடுத்துள்ள "தேஹு ரோட்" என்ற ஊரில் அவதரித்த விஷ்ணுபக்தர் யார் ? அவர் பாடிய பாடல்களின் மொத்தப்பெயர் என்ன ?

10) இக்கலியுகத்தில் ஸ்ரீராமன், சீதை, லக்ஷ்மணன், அநுமன் ஆகியோருடன் தஞ்சை மாவட்டம் காவிரிக்கரையில் வாழ்ந்த சிறந்த பக்தரும், சாஹித்ய கர்த்தாவுமான ஒரு தெலுங்கு பிராம் மணருக்குத் தரிசனம் அளித்தார். அவரது பெயரென்ன ?

11) தமிழ்நாடு — ஆந்திர எல்லையில் சிவபெருமான் பள்ளிகொண்ட கோலத்தில் காட்சி அளிக்கும் தலம் எது ? (விடைகளுக்குக் கீழே காண்க.)

## தவத்தின் மஹிமை

இக்ஷ்வாகு மகாராஜா அரசாண்ட காலத்தில் நடந்த கதை இது. ஒரு சந்நியாஸி வெகு காலமாக தவம் செய்து கொண்டிருந்தார். வயது முதிர்ந்தது. எல்லோரையும்போலவே அவருக்கும் அந்திய காலம் வந்தது. வழக்கம் போல் அவர் உயிரைக் கவர்ந்து செல்ல யமதூதர்கள் வந்தனர். சந்நியாஸி அவர்களை நோக்கி "நீங்கள் வந்த காரணம் என்ன? என்ருர்.

யமதூதர்கள் : இன்றுடன் தங்கள் ஆயுள் முடிகிறது. தங்கள் உயிரைக் கொண்டு செல்லவே வந்தோம்.

சந்நியாஸி : இவ்வுடலுடன் என்னைக்கொண்டு செல்வதானுல் வருகிறேன்.

அந்த சந்நியாஸியின் தபோமஹிமையால் யமதூதர்கள் ஒன்றும் செய்ய முடியாமல் வந்த வழியே சென்றனர். பின்னர் காலமிருத்யு வந்தார். அவரிடமும் பலவிதமாக பேசி உயிரிழக்க மறுத்துவிட்டார். கடைசியாக தர்ம ராஜனே நேரில் வந்தார். அவருக்கு வேண்டிய உபசாரங்கள் செய்து, வந்த காரியத்தை வினவினுர்.

தர்மராஜா : தங்கள் உயிரைக் கவர்ந்து செல்லவே வந்திருக்கிறேன்.

சந்நியாஸி : ஐயா! என் உடலுடன் நான் வர இயலுமானுல் உம்முடன் வருகிறேன். அல்லாது மற்ற உலக இன்பங்கள் வேண்டாம்.

தர்மராஜா : ஐயா! உலகில் பிறத்தல் உண்டாயின் இறத்தல் நிச்சயம். உமக்கு மட்டும் மாற்றியமைத்தல் இயலுமா?

சந்நியாஸி : ஐயா! என் தாயும், தந்தையும் எவ்வளவு கஷ்டப்பட்டு என்னை ஈன்றனர்! பின்னுல் என் தாய் இரவு பகல் பாராது எவ்வளவு காலம் இவ்வுடலை போஷித்து வளர்த்தேன். இவ்வளவு சிரமப்பட்டு வளர்த்த உடலை விட்டு வரவே மாட்டேன்.

சந்நியாஸியின் தபோமஹிமையால் தர்மராஜாவால் கூட ஒன்றும் செய்ய இயலவில்லை. அதனுல் இக்ஷ்வாகு மகாராஜாவிடம் வந்து தர்மராஜர், "நீ எவ்விதத்திலாவது தந்திரமாக அவருடைய தபோமஹிமையைக் கவர்ந்துவிடு" என்ருர்.

உடனே மஹாராஜாவும் மஹரிஷியின் ஆச்சிரமத்திற்கு சென்ருர். ரிஷியும் மஹாராஜாவிற்கு செய்ய வேண்டிய உபசாரங்கள் செய்து வந்த காரியத்தை வினவினுர்.

ராஜா : தங்களுக்கு ஏதாவது உதவி தேவையானுல் செய்யக் காத்திருக்கிறேன்.

சந்நியாஸி : எனக்கு உன்னிடம் ஆகவேண்டியது ஒன்றுமில்லை. உனக்கு வேண்டியதைக்கேள். நான் தருகிறேன்.

இதுதான் சமயமென்று அரசனும் "தங்கள் தபஸ் சக்தியை எனக்குத் தானமாகத் தரல்வேண்டு"மென்ருர். சந்நியாஸியும் தன் தபோபலத்தை அரசனுக்கு அளித்தார். இதற்காகவே காத்திருந்த தர்மராஜனும் உலக வழக்கப்படி சந்நியாஸியின் உயிரைக் கவர்ந்து சென்ருர்.

இதிலிருந்து தவத்தின் சக்தி, தேவவைகளைக்கூடப் பணிய வைக்கிறது என்பது புலனுகிறது. ★

நன்றி : ஸ்ரீ சங்கரக்ருபா.

### வினு - விடைகள்

1. பாஞ்சராத்ரம் : ஐந்து இரவுகளில், விஷ்ணு பகவானுல் சொல்லப்பட்ட விஷ்ணு வழிபாட்டு முறை.
   வைகானஸம் : விகனஸ் என்ற முனிவரால் உபதேசிக்கப்பட்ட விஷ்ணு வழிபாட்டு முறை.
2. சிருங்ககிரி - கர்னுடகத்தில்.
3. நம்மாழ்வார். 4. ஸ்ரீ மத்வாச்சார்.
5. உடுப்பி - (கர்நாடகத்தில்).
6. கனக துர்க்கா.
7. தஞ்சைஜில்லாவிலுள்ளதிருக்கடையூர்
8. தஞ்சை ஜில்லாவில் சீர்காழி.
9. துகாராம் - அபங்கங்கள்.
10. ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள்.
11. சுருட்டப்பள்ளி - ஊத்துக்கோட்டை அருகே.

# ஸ்ரீ வேங்கடரமண பாகவதர்

திரு. கே. ஆர். கிருஷ்ணமாச்சாரி.
ஈரோடு.

மாணவர்கள் தங்கள் ஆசிரியர்களிடம் அன்பாகவும் பணிவுடனும் நடந்து கொள்ளவேண்டும். ஆசிரியருக்குத் தொண்டு புரிதல் வேண்டும். இதையே நம் முன்னோர்கள் குருபக்தி என்று குறிப்பிட்டனர். கடந்த நூற்றுண்டில் வாழ்ந்த ஸ்ரீமத் வேங்கடரமணர் தமது குருவாகிய ஸ்ரீ தியாகராஜ சுவாமிகளிடம் எப்படிப் பக்தி உடையவராக விளங்கிஞர் என்பதைச் சற்றே பார்ப்போம்.

திருவையாறில் தியாகராஜரின் வீட்டில் எப்பொழுதும் பஜனையும் பக்தியுமாக இருக்கும். பாமரர் முதல் பாராளும் மன்னர் வரை எந்த வித வித்தியாசமுமின்றி தியாகராஜரின் இனிய கானத்தைக் கேட்க படையெடுப்பர். திருவையாறிலிருந்து 7 மைல் தூரத்தில் உள்ளது அய்யம் பேட்டை எனும் ஊர். அங்கு வாழ்ந்து வந்தார் வேங்கடரமணர். இள வயதினரான வேங்கடரமணரும் சுவாமிகளின் வீட்டில் நிகழும் பஜனைகளில் தவருது கலந்து கொள்வார். அதற்கென்றே ஏழு மைல் நடந்து வருவார். மனதில் தியாகராஜரைத் தமது குருவாக வரித்துக் கொண்டார். குருவின் மீது பக்தி கொண்ட அவரதுஉள்ளம் அவருக்குத் தொண்டு புரிய விரும்பியது. பக்தி சிரத்தை கொண்ட வேங்கட ரமணருக்குச் சுவாமிகளின் தேவை நன்கு புலப்பட்டது. தியாகராஜ சுவாமிகளின் பூஜைக்குமிகத்தேவையானதுதுளசித் தளங்கள். அதனை அக்கறையுடன் பறித்துக் கொண்டு வந்து சுவாமிகளின் வீட்டுத் திண்ணையில் வைத்து விட்டு வந்த சுவடு தெரியாமல் செல்லும் பழக்கம் கொண்டவராஞர் வேங்கடரமணர். தியாகராஜரின் சீடர்களும் அதனையெடுத்துச்சென்று குருவிடம் சமர்ப்பிப்பர்.

பலநாட்கள் இப்படியே நடந்து கொண்டிருந்தது. ஒரு நாள் அன்று



வழக்கமாக இருக்கும் துளசிப்பொட்டலத்தைத் திண்ணையில் காணவில்லை. சீடர்களுக்கு ஒரே ஏமாற்றம். குரு கேட்டால் என்ன பதில் கூறுவது என்று திகைத்தனர். இதுநாள் வரை வேங்கடரமணரின் இத்தொண்டினை அறிய இயலாத தியாகராஜர் தமது சீடர்களிடம் தீர விசாரித்து அறிந்து கொண்டார். அய்யம் பேட்டையிலிருந்து திருவையாற்றிற்குச் சுமார் ஏழு மைல் தூரம் கால் நடையாக நடந்து துளசிப் பொட்டலத்தைக் கொண்டு வந்து தரும் வேங்கடரமணரால் அன்று உடல் நலமில்லாததால் வர முடியவில்லை என அறிந்தார். வேங்கடரமணரின் அரிய தொண்டினையும் பக்தியையும்அறிந்து உள்ளம் உருகிஞர். மறுநாள் துளசிப் பொட்டலம் கொண்டுவர முடியாமற் போனதற்காக மன்னிப்பு வேண்டி நின்ற வேங்கடரமணரை உளமாரப் பாராட்டிஞர். தமது சிஷ்யர்களில் ஒருவராகஏற்றுக்கொண்டார். அதன் பின்னும் வேங்கடரமணர் துளசி கொண்டுவரும் வழக்கத்தை விடாமல் தொடர்ந்து செய்து வந்தார்.

ஒரு முறை வழக்கம் போல் குருவினிடம் சமர்பிக்கத் துளசித் தளங்களை ஒரு பூக்குடலையில் எடுத்துக் கொண்டுஅய்யம்பேட்டையிலிருந்து புறப்பட்டார் வேங்கடரமணர். ரமணரின் பெருமையை வெளிப்படுத்தஇறைவனின் திருவிளையாடல் போல் அன்று வேங்கடரமணருக்கு ஒரு சோதனை ஏற்பட்டது. அய்யம் பேட்டையிலிருந்து திருவையாறு வந்து சேர ஆற்றைக் கடந்து வருவது வழக்கம். எப்பொழுதும் நதியில் கொஞ்ச மாகத்தான் தண்ணீர் ஓடிக் கொண்டிருக்கும். எனவே கடந்து வருவது சுலபமாக இருக்கும். ஆனல் அன்றோ நதியில் வெள்ளம் பெருக் கெடுத்து ஓடிக் கொண்டிருந்தது. ஆற்றின் மறு கரையிலிருந்த வேங்கடரமணர் பெருகி ஓடும் வெள்ளத்தைப்பார்த்து ஒரு கணம் மலைத்து நின்ருர். ஆனல் குருவின் மீது கொண்ட அவரது பக்தி வெள்ளமாகி, ஆற்றின் வெள்ளத்தை எதிர்த்து எதிர் நீச்சல் போட்டது. சிறந்த உடற் கட்டும் ஹடயோக பயிற்சியும் பெற்றவர் வேங்கடரமணர். இறைவனின் சோதனையில் வெற்றி பெற்று உரிய நேரத்தில் துளசித் தளங்கள் கொண்ட பூக்குடலையை குருவினிடம் சமர்ப்பித்தார். பூஜை நேரத்தில் வழக்கம் போல் துளசித் தளங்கள் வந்து சேர்ந்தன. வெள்ள நீர் சொட்டச் சொட்ட நனைந்து காணப்பட்ட வேங்கடரமணரையும் அதே சமயம் ஈரமே படாத பூக்குடலையையும் கண்ட தியாகராஜ சுவாமிகள் சீடரின் பக்தி உள்ளத்தை அறிந்து அகமகிழ்ந்தார்; மனமார ஆசிவதித்தார்.

கண்ணனே இவருக்குப் பாகவத எனும் பட்டத்தை அளித்ததாக வ லாறு உள்ளது. அது ஒரு சுவையாக

நிகழ்ச்சி. தியாகராஜரின் இல்லத்தில் நிகழும் பஜனைகளில் வேங்கடரமணர் தவறாது கலந்து கொள்வாரல்லவா? அதுவும் பஜனையில் மங்களம் பாடி முடிக்கும் பேற்றினை தியாகராஜர் இவருக்கு அளித்திருந்தார். ஒரு சமயம் அன்று ஏகாதசி பஜனை. வேங்கடரமணர் பஜனை ஆரம்பத்தில் இருக்கவில்லை; மங்களம் பாடும் நேரமும் நெருங்கிக் கொண்டிருந்தது. வேங்கடரமணர் இன்றி மங்களம் பாடி பஜனையை முடிக்க நேருகிறதே என்று தியாகராஜரின் மனம் வருந்திக் கொண்டிருந்த வேளையில் பாலகன் ஒருவன் தியாகராஜரின் இல்லத்தில் நுழைந்துதியாகராஜரின் மனைவியாரிடத்தில் ''இதோ வேங்கடரமண பாகவதர் வந்து கொண்டிருக்கிறார்.'' என்று கூறி மறைந்து விட்டான்.

தியாகராஜரிடம் இது தெரிவிக்கப்பட்ட போது தனது ஞான திருஷ்டியால் வந்து சென்ற பாலகன் வேங்கடரமணரின் இஷ்ட தெய்வமான ஸ்ரீ கிருஷ்ணனே என உணர்ந்தார். வேங்கடரமணர் வந்து சேர்ந்த போது ''வாரும் வேங்கடரமண பாகவதரே' என்று அழைத்தார். குரு புதிதாக தம்மை 'பாகவதர்' என அழைத்தபோது திடுக்கிட்டார். பின் குரு அவருக்கு நடந்த சம்பவத்தைக் கூறி 'கண்ணனே உன்னைப் 'பாகவதர்' என்று அழைக்கும் போது நான் அழைப்பதில் தவறில்லையே' எனக் குறிப்பிட்டாராம்.

கால் நூற்றுண்டு காலம் குருவுடன் இணைந்து காணப்பட்ட இவர் தியாகராஜரின் பிரதம சிஷ்யராக விளங்கியவர். இன்று தியாகராஜரின் வரலாறு, கிருதிகள் கிடைக்கிறதென்றால் அதைப் போற்றி பாதுகாத்து அளித்தவர் வேங்கடரமணரே யாகும். அய்யம் பேட்டையில்உதித்த இவர் வாலாஜாப் பேட்டையில் தமது இறுதிக் காலத்தைக் கழித்தார். குருவின் கிருதிகளைப் போற்றிப் பாதுகாத்து அளித்து தாமும் நூற்றுக் கணக்கான கிருதிகள் இயற்றியுள்ளார். குருவிற்கோ ராமபக்தி. இருவருக்கோ கிருஷ்ணபக்தி அதிகம். ஸம்ஸ்கிருதம், தெலுங்கு, தமது தாய்மொழியான ஸௌராஷ்ட்ர மொழி இவற்றில் பாண்டியத்யம் நிறைந்தவராக விளங்கிய இவர் ஸ்ரீ தியாகராஜரைப் போற்றி ஸ்ரீ குரு ஸ்தோத்ராஷ்டகம், ஸ்ரீ குரு ஸ்தோத்ர பஞ்சரத்னம், ஸ்ரீ தியாகராஜஸ்வாமி ஸங்கிரஹம், ஸ்ரீ குரு மங்களாஷ்டகம் ஆகியன பாடியுள்ளார்.

1981 பிப்ரவரியில் இவரது 200/-வது ஜெயந்தி விழா கொண்டாடப்பட்டது. அன்னாரைப் போற்றுவது கர்நாடக சங்கீதத்தைப் போற்றுவதற்கு ஒப்பாகும்.



# மாங்கல்யத்தின் மகத்துவம்

**திருமதி. கே. சரோஜாலக்ஷ்மணன் - கோவை-18.**

மாங்கல்யம் என்பது மணம் கொண்ட மங்கையர் சரடுடன் சேர்த்து அணிந்து கொண்டிருக்கும் ஒரு மங்கல அணியாம். மகளிர் எத்தனை அழகுடன் விளங்கினாலும், மங்கலநாண் இல்லையானால் அவை அனைத்தும் பயன்படா. தாலியில்லா மங்கை தந்திகளில்லா வீணை போலாம். தாலி கட்டும் வழக்கம் தமிழ் நாட்டில் அந்தணர் முதல் ஆதி திராவிடர் வரை பலவாறாக அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. குறவர்கள் வேட்டையிலே தங்கள் வீரத்தையும், காதலையும் காட்டி புலியின் நகம் அல்லது புலிப் பற்களை அவர்தம் துணைவியின் தாலிகளில் கோர்த்து புலிப்பல் தாலியாக அணிந்து வந்தனர். இதுவே பிற்காலத்தில் ''பொன் தாலி''யாக மாறியது.

''தாலி பெண்ணுக்கு வேலி'' என்பது மூதறிஞர் வாக்கு. புலிப் பல் தாலி, இடபத்தாலி, ஆமைதாலி, ஐம்படைத் தாலி, தங்கத் தாலி என்று தாலிக்கு பலவிதமாக பெயர்கள் வழங்கி வருகிறது.

''புலிப்பல் ருளிப் புன்றலைச்சிறுர்
பாப்பு எயிற்றன்ன பன்னிரைத்தாலி'' (பெருங்கதை)

என்றும் ''தாலி ஐம்படை தழுவு மார்பிடை'' என்று கம்பர் பெருமானும் தாலியின் மகிமையைச் சிறப்புடன் எடுத்துச் செப்புகின்றனர். ஐம்படைத்தாலி என்றால் சங்கு, சக்கரம், வில், வாள், தண்டு முதலிய உருவம் அமைந்ததாகும் (திருமாலின் பஞ்சாயுதம்).

'' பூண்டவை எறியா வாளும் ஏற்று மழுவும்
செறிய கட்டி ஈரிடைத் தாழ்ந்த
பெய் புலமூ தாய்ப்புகர் நிறத்துகிரின்
மையற விளங்கிய ஆனேற்று அவிர்பூண்''

இந்த செய்யுளில் ''ஆனேற்று அவிர் பூண்'' எனக் கூறப்பட்டுள்ளது, ரிஷபத்தாலி பற்றியே யாகும். அதாவது ரிஷபத்தின் உருவம் அமைந்த மாங்கல்யமாகும்.

தங்கத் தாலியைப் பற்றி ''கோதின் மங்கல நூல் தாலி பொன் தாலியோடு புனைத்தான்'', ''நல்லோன் புனைந்த நெற்சிறு பொன் தாலி'' ''மங்கல நாண் கண் டிறைவன் மறித்துஞ் சொல்வான்'' என்று பலவாறாகக் கூறப்பட்டுள்ளது. ''தாலியில்லாது கலியாணமில்லை'' என்ற பழமொழி, மிகவும் தொன்மையானது.

இத்தகைய மாண்பு வாய்ந்தது பொற்றாலி. அதன் மகத்துவத்தை எவ்வளவு வேண்டுமாயினும் கூறலாம். மாங்கல்யம் தரித்துள்ள மங்கையின் திருமுகம் கண்ட மாத்திரத்தில் பாவம் தொலையும். அவர்கள் இருப்பிடத்தில் மஹாலக்ஷ்மி வாசம் செய்வாள்.

# திருமலை ஒழுகு

வானாதியோகிவர வேங்கடயோகிவர்ய
ஸ்ரீ பட்டநாதமுனி வாதிபயங்கரார்யா:।
ராமானுஜார்ய வரதார்ய நதார்திஹாரி,
ஸ்ரீ தேவராஜகுரவோऽஷ்டதி
சாகஜாஸ்தே ॥

மார்க்கண்டேய புராணே ஸ்ரீ வேங்கடாசல
மாஹாத்ம்யே—

வைகுண்டலோகாத் கருடேந
விஷ்ணோ:
க்ரீடாசலோ வேங்கடநாமதேய:।
ஆநீய ஸ ஸ்வர்ணமுகீ ஸமீபே
ஸம்ஸ்தாபிதோ விஷ்ணுநிவாஸ
ஹேதோ:॥

என்றும்,

வைகுண்டாதாகதத்வாச்ச வைகுண்
டாத்ரி ரிதி ஸ்ம்ருத:।

என்றும்,

சுகாத்யா முநய: கேசித் ப்ருக்வாத்
யாச்ச தபோதநா:।
ப்ரஹ்லாதப்ரமுகா: புண்யா: அம்பரீ
ஷாதயோ ந்ருபா:॥

விஷ்ணோரேவாபரம் தேஹம் மந்வா
நாஸ்தம் நகோத்தமம்।
பத்ப்யாமாக்ரமிதும் பீதா பர்யந்
தேஷ்வேவ வர்திந:॥

தந்நிர்கத நதீஷ்வேவ குர்வாணா:
ஸ்நாநதர்பணே।
தப: குர்வந்தி வாஞ்சந்த: ஸாக்ஷாத்
கர்தும் ஜநார்தநம்॥

ப்ரஹ்ம ப்ரஹ்மாண்ட வாமனாதிகளிலே திருமலையாழ்வாரை ப்ராக்க்ருத சரீரங்கொண்டு மிதியோமென்று சுகாதிகள் பர்வத பரிஸரத்திலேயிருந்து,(பக்கமானஇடத்திலே) பகவதநுபவம் பண்ணி னத்தை பகவந் நிர்ஹேதுக கடாக்ஷ ஸக்ஷாத்க்ருத பகவத் ஸ்வரூப ரூபகுண விபூதி விசேஷரான ஆழ்வார்களும் அறிந்து, ஸ்வ ஸ்வ ஸ்தாநங்களிலேயிருந்தும், திருமலை யடிவாரத்திலே யிருந்தும், மங்களாசாஸனம் பண்ணிக்ருதார்த்தராய் இருந்த படியை ஸ்ரீ பாஷ்யகாரர், தம் திருவுள்ளத்திலே சிந்தித்து, ஸ்ரீரங்காதி திவ்ய தேசங்களிலே ஆழ்வார்களைத் திருப்ரதிஷ்டை கொண்டருளப்பண்ணி ஆழ்வார்கள் திருவுள்ளத்தை யறிந்தவ ராகையாலே, திருமலையிலே, ஆழ்வார்களைத் திருப்ரதிஷ்டை கொண்டருளப் பண்ணாமலிருந்தும், தாமும் ஆழ்வார்களைப் போலே திருமலை ஏறாமலும், ஒரு காலவிசேஷத்தில் உபாதி நிமித்தமாகத் தினத்ரயம் சுஷ்கோபவாஸமாய் இருந்து திருமேனி சோதனம் பண்ணிக் கொண்டு திருமலை ஏறியருளி, அப்பனுக்குத் திருவாழி திருச்சங்குகளைச் சாத்தியருளப் பண்ணி, மங்களசாஸனம் செய்தருளினதை, தத் காலத்தில் பெரியோர்களான ஸ்தலாபிமானிகளால் அறிந்து, திருக்கார்த்திகை மஹோத்ஸவத்திலே திருவேங்கடமுடையான் திருமுகப் பட்டை ஆழ்வார்களுக்குப் பிரஸாதிக்கும்படி கட்டளைபண்ணி, அத்யயனோத்ஸவத்திலே திருமாமணி மண்டபத்திலே மற்றை யாழ்வார்களுக்கு ஆசார்யரான நம்மாழ்வாருக்கு ஆசார்யரான ஸேனைமுதலியாரையும், அனந்தாழ்வான் கைங்கர்யமான அர்ச்சாரூமாய் எழுந்தருளப் பண்ணினவராய், ஸ்ரீ வைஷ்ணவ தர்சநாபிமானியான எம்பெருமானாரையும் ஸ்வாமி ஸந்நிதியிலே எழுந்தருளப் பண்ணி, ஆழ்வார்கள் ஸ்ரீ ஸூக்திகளான திவ்ய ப்ரபந்தங்களை ஸ்வாமி கேட்டருளும்படி கட்டளைபண்ணினார் மணவாள மாமுனிகள் என்று பெரியோர்கள் அருளிச் செய்வார்கள்.

கோவிந்தராஜனும் திருவேங்கடமுடையான் சாயாநுவர்த்தனம் பண்ணுகிறவ ராகையாலே, (நிழலைப் பின்பற்றுபவர்) தம்முடைய ஸந்நிதிக்கு எம்பெருமானார் நியமனத்தின்படியே ஆழ்வார்கள் எழுந்தருளியிருந்தாலும், திருமுகப் பட்டயம் மாத்ரம் அனுப்புவிக்கிற தில்லை. மற்றைய ஸ்ரீராமாநுஜ தர்சனங்களெல்லாம் திருவோலக்கத்திலே நடக்கும்படி பெரியோர்கள் கட்டளை பண்ணினார்கள்.

பூர்வ காலத்திலே ஸாளுவ நரஸிம்ஹராய னென்பான் ஒருவன் நரபதியாய் ப்ருதிவி ராஜ்யம் பண்ணும் போது மிலேச்ச கலஹம் ப்ரஸக்தமாய் அவர்கள் இந்தத் தேசத்திலே வந்து தேவப்ராஹ்மண ஹிம்ஸையைப் பண்ணாநிற்க, அப்போது, வீர நரஸிம்ஹ ராயன் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே பக்திமானாகையாலே, திருமலையிலே மலை குனிய நின்ற பெருமாளையும், கோவிந்தராஜன் முதலான பேர்களையும், ஸ்ரீ பண்டாரத்தையும் பாபநாச தீர்த்தத்துக்குக் கிழக்காய் அதிகோப்யமான குகையிலே எழுந்தருளப்பண்ணி, நித்யாராதனமும் தப்பாமல் நடப்பித்துப் கொண்டு, பெரிய பெருமாள் திருமேனிக்கு ரக்ஷையாகத் திருமலையிலே கல்வேலியுங் கட்டிவைத்துக் கொண்டிருக்க, அந்தக் காலத்திலே, மிலேச்சரும் மலை ஸமீபத்திலே வாரா நிற்க, ராஜனும் மிலேச்சரை ஸம்ஹரிக்கையிலே அசக்தனாய், ஒருநாள் திருவேங்கடமுடயான் ஸந்நிதியிலே வந்து, ''ஸ்வாமிந், தேவரீர் தாமே இந்த மிலேச்சோபத்ரவத்தைப் போக்கடிக்க வேணு'' மென்று ப்ரபத்திபண்ண, அன்று ராத்ரி, ராயன் ஸ்வப்நத்திலே திருவேங்கடத்தரியான அழகிய சிங்கர் ஸாக்ஷாத்கரித்து, ''வாராய் நரபதியே, பூர்வ காலத்திலே நாம் ஒரு பக்தன் ஆபத்தைப் போக்குகைக்காக நமக்கு அஸாதாரணங்களான சங்கசக்கரங்களை அப் பக்தனுக்குக் கொடுக்கையாலே, நம்முடைய ஸர்வேச்வரத்வத்தைப் போக்கித் தேவதாந்த்ர பரமாக எண்ணின பாமர ஜனங்களைச் சாஸ்த்ரமுகத்தாலும், ப்ரத்யுக்ஷாதி ப்ரமாணங்களாலும் நஷ்டமாகப் பண்ணி, நமக்கு அஸாதாரணங்களான திருவாழி திருச்சங்குகளையும் தந்து, நம்முடைய சர்வேச்வரத்வத்தையும் ப்ரகாசிப்பித்து, நம்முடைய சரீரத்துக்கும், ஸம்பத்துக்கும் ரக்ஷகராய் நம்முடைய திவ்ய க்ஷேத்ரத்துக்கு வந்த ஆபத்தையும் நீக்கியவரான ஸ்ரீ பாஷ்யகாரர் முத்ரைக்குக் கர்த்தாவான ஏகாங்கி ஸ்ரீ வைஷ்ணவரைக் கொண்டு மிலேச்ச கலஹத்தைப் போக்கடிக்கிறோம். அவரோடே உன்னுடைய சதுரங்க ஸேனைகளையும் கூட்டி, அவருக்கு நர வாஹனமும் கொடுத்து மிலேச்சர்க்கெதிராகப் போம்படி அனுப்பினால், அவரே ஸமஸ்த பாபங்களையும் போக்கடிக்கிறார்'' என்று அருளிச் செய்தார்:

(தொடரும்)

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

அமைந்திருக்கும். இந்த ஸ்தானம் நமது சரீரமாகிய ஆலயத்தின் கண்ணுள்ள இருதயத்தின் புறச்சின்னமாக விளங்குகிறது.

"பத்மகோச ப்ரதிகாசகும் ஹ்ருதயஞ்
சாப்யதோ முகம்
அதோ நிஷ்ட்யா விதஸ்த்யாந்தே
நாப்யாமுபரி திஷ்டதி
ஜ்வாலமாலாகுலம் பாதி விஸ்வஸ்
யாயதனம் மஹத்"

எனும் நாராயண ஸூக்தத்தின் சுருதி வாக்கியம் ஒப்பு நோக்கற்பாலது.

தெய்வ தரிசனத்திற்குப் பேரார்வத்தோடு உள்ள முருகிய நிலையில் காத்திருக்கும் பக்தன் கெற்பக்கிருஹத்தில் எழுந்தருளியுள்ள திரை நீக்கப் படுவதையும், மணியோசை ஒலிக்கப்படுவதையும், தெய்வத்தின் அருகண் அணையாவிளக்கு (தூண்டா விளக்கு) ஒளி வீசித் திகழ்வதையும் கற்பூர ஆராதனைக் காட்டப்படுவதையும் கண்டு பக்திப் பேரானந்தத்தில் திளைத்து, ஆனந்தக் கண்ணீர் ததும்ப ஆண்டவனை தரிசிக்கிறான். தெய்வத் திருவுருவின் அருகண் அமைந்துள்ள அணையா விளக் கொளியால் அத் தெய்வத் திருவுருவின் தரிசனத்தைப் பக்தன் பேரானந்தத்துடன் காண முடிவது போன்று, நம் உள்ளத்தே ஞான ஒளி விளக்கு அணையாதிருக்குந்தோறும் நாம் ஆண்டவனின் காட்சியை அகத்தே காணும் அநுபவத்தைப் பெறலாம் என்பது இதன் தத்துவ மாகும்.

## ஆன்மாலயமும் ஆத்மசொரூபமும்:

மனதை அந்தர்முக நோக்குடன் தீவிர சாதனம் பழகிவருபவருக்கு மனத்தகத்துள்ள அஞ்ஞான மாகிய திரை சிறிது சிறிதாக அகலப் பெற்று மனதில் உயர் ஒளி உதித்து, முடிவில் அஞ்ஞானத்திரை முழுதும் அகலப்பெற்று, திவ்விய தேஜோமய ஞான ஒளியாகிய ஆத்ம சொரூபம் கிட்டும் என்பதை ஆலய தெய்வ தரிசனம் விளக்குகின்றது.

ஆன்மா லயப்படுவதற்காகவே ஆன்றோர்கள் ஆலய வழிபாட்டை வகுத்தனர். "ஆலயம் தொழுவது சாலவும் நன்று", "கோவிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" "யத்ர தேவாலயோ நாஸ்தி தத்ர வாஸம் நகாரயேத்". இப்புனிதப் பொன் மொழிகளின் சிறந்தக் கருத்துக்களை ஈண்டு சிந்தித்தல் அவசியமாகும். அருட்பயன் பெற்றச் சான்றோரும் வாசனை மலம் தாக்காதிருக்கும் பொருட்டு ஆலய வழிபாடு புரிவது இன்றியமையாதது என்பதை 'சிவஞான போதம்' கீழ் வரும் பாடலில் விளக்குகின்றது:

"செம்மலர் நோன்றாள் சேரலொட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரனெனத்
தொழுமே."

மனது மெய்ப்பொருளாகிய பரமாத்ம சொரூபத்தை மறைத்து பொய்ப் பொருளாகியப் பிரபஞ்சத்தை விளக்கிக்கொண்டு இருக்கின்றது. இதை தீவிர சாதனையால் உணர்ந்து ஆத்ம போதம் பெற்று "அயம் ஆத்மா" எனும் விழிப்படைதல் வேண்டும். இதனையே,

"இனித்தான் எழுந்திராய்
ஈதென்ன பேருறக்கம்"

என, ஸ்ரீ ஆண்டாளின் அமுதவாக்கு நன்கு வற்புறுத்துகின்றது.

ஆண்டவனையடைவது ஆன்மாக்களின் குறி. அதற்கு ஆலய வழிபாடு சிறந்த நெறி. இம்மேலாம் தத்துவத்தைக் கருத்திற் கொண்டே நமது ஆன்றோர்கள் ஆலய அமைப்பையும் வழிபாட்டையும் நிறுவினர். அந்நெறி பற்றி ஆலயந்தொழுது ஆண்டவனின் நிறை அருள் பெற்றுய்வோமாக.



ஜீவிதா வநிதா சைவ, ஸ்வயமேவாக தாவரா!
பலாதாஹ்ருஷ்யமாணுசேத் ஸரஸா விரஸாபவேத்‖

என்கிற சமஸ்கிருதச் செய்யுளானது, கனிந்த கன்னியும், தணிந்த கவிதையும், தானே வந்தால்தான், தனித்த இன்பம் பெருகும். பலவந்தம் பண்ணினுல் விரஸமாகும் என்றது. உடல் நீராக, உள்ளம் உறமாக, கருத்துக் கிழங்காக, கட்டுப்பாடு கரையாக, பக்தியே காற்ருக, கண்ணன் கருணையே கதிரவனுக, தன்னடியார் திரு நாவிலே தமிழ்ப் பாக்கள் தாமே மலரும். அம்மலர்த் தேனைப் பருகி, நெறி கொண்ட பொறி வண்டுகள், ரீங்காரம் செய்யும். இவ்வகையில் திருவேங்கடச் செல்வனுல் மயர்வற things are greater than all things. One is love and other is war'' என மறைமுகமாகக் கூறினுர். ஒரு பொற்காசுக்கு இருபக்கங்கள் இருப்பன போல், இன்பச்சுவைக்கும் ஊடலும் கூடலும் இருபக்கங்களாகும். திருவள்ளுவரும் உண்ணும் உணவில் உப்பு எவ்வாறு அவசியமோ, அவ்வாறு தலைவன் தலைவியின் கூடல் வாழ்வில் இன்பம்பெருக இடை இடையே ஊடலும் தேவைதான் என்ருர். ''உப்பு அமைந்தற்ருற் புலவி'' எனவும்

'' யாரினும் காதலம் என்றேனு ஊடினுள்
யாரினும் யாரினும் என்று''

எனவும் கூறினுர். புகழேந்தி என்ற தமிழ்க்கவி, தமயந்தி நளனிடம் வாழகில்லார். அவனே உண்ணும் சோறு, அவனே பருகும் நீர் என்றிருப்பார்கள். சிற்றின்பம் பயக்கித் தன்னலம் மேம்படச்செய்யும் ஆபாஸக் காதல் சுவை பக்தியின் முனைப்பில் இவர்களுக்குத் தெய்வக் காதலாகிற்று. ஆதலால் இவர்கள் '' கண்ணனுக்கே ஆவது காமம் '' என்று கதறுவார்கள். இதைத்தான் ஸ்ரீ சுவாமி தேசிகன்,

''பக்திசிருங்காரவ்ருத்யாபரிணமதிமுநேர் பாவபந்தப்ரதிம்ன'' என்ருர்,

பிரமசூத்ரம் முக்தனுன ஜீவனுனன, பரமாத்மாவான ஸ்ரீமந்நாராயணனுக்குச் சரீரம் போன்றிருப்பதால் ஒரு ஜீவன் அவனை விடத்தான் வேறு என எண்ணுமல், அவ

# ★ இதயக்கனியின் இன்பச்சுவை ★

மதிநலம் அருளப்பெற்ற, திருமாலடியார்களான, ஆழ்வார்களின் அருளிச் செயலமுதம், இலக்கியமணம் கமழப் பக்திச்சுவை சொட்டச் சுவைக்க வல்லது. செந்தமிழ்ச் செல்வர்களாகிய ஆழ்வார்களின், ஆராவமுதக் கவிதைகளில், பழம் தமிழ் இலக்கண இலக்கிய அழகு, நூலிழை கோத்திருக்கும். தமிழுக்கே உரிய, பொருள் இலக்கணத்தில் வரும் அகத்திணை, புறத்திணைகளில் அகத்திணைக்கு அதிக ஏற்றமும் காரணப்படும். அகத்திணையின் ஒழுக்கத்தில்,புணர்தல்,பிரிதல்,இருத்தல், இரங்கல், ஊடல் என ஐந்து நிலை அலைபாயும். இதை ''அன்பின் ஐந்திணை'' என்பர். இந்த ஐந்தில் கடைசியில் கூறப்பட்ட ஊடல் என்ற விரகம் அதாவது பிரணய கலகம் என்பது காதல் சுவைக்கு உரம் போன்றதாகும்.சம்ஸ்கிருத ஆலங்காரிகர்கள்,

''ந விநா விப்ரலம்பேனச்ருங்காரப் புஷ்டிமச் நுதே‖

என்ருர்கள். இதனை கிரேக்கப் பெருங்கவிஞர் ஹோமர் :— TWO ஊடல் கொண்ட இடத்தில், ஒரு சோலையைக் காட்டி ஊடல் இன்பத்தின் உயர்வைச் சிறப்பிக்கும் வகையில் :

''கன்னியர்தம் வேட்கையே போலும்,
களிமழலை, தன்மணிவாய் உள்ளே
தடுமாற'' என்ருர்:

பொய்யாமொழியும் பிறிதோரிடத்தில்,

''ஊடுதல் காமத்திற்கின்பம்
அதற்கின்பம் கூடி முயங்கப் பெறின்

என்றது.

## அமுதத் தமிழ்

பாலேய் தமிழர்களான ஆழ்வார்களுக்கு, முத்தமிழ்ச் சுவைபோன்ற முல்லைக் கண்ணனே, தேனும், பாலும், கன்னலும், கற்கண்டும், அமுதமுமாகினுன். 'நீரை விட்டுப் பிரிந்த மீன் உயிர்வாழாது'' என்பது போல் அத்தகைய ஆழ்வார்கள் அக்கார் முகிலின் தொடர் பின்றி னுடன் பிணைந்து ஒன்றி இருந்து அவனுடைய கல்யாண குணங்களை ஒன்பது விதமான உறவுகொண்டு அனுபவிக்கிருன் எனக்கூறியது. இந்நிலையில் ஜீவனும் பரமாத்மாவும் இரு தராசுத் தட்டுகளில் சேர வைக்கப்

ஸ்ரீ. உ. வே. வித்வான் தஞ்சை,
என். எஸ். தாதாசாரியார்,

பட்ட தங்கமும், இரும்பு எடைக் கல்லும் அளவையில் ஒன்ருய்ச் சிறப்பில் மாறுபட்டதாய்க்காண்பதுபோல் வேற்றுமையில் ஒருமைப்பாடு உள்ளவர்கள் ஆவார்கள் என்று காட்டியது. இவ்வகையில் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பிரிக்கமுடியாத ஒன்பது உறவு உண்டு.

பிதாச ரக்ஷக ச்சேஷீ பர்த்தாஞே யோரமாபதி: |
ஸ்வாமி ஆதாரோமமாத்மாச போக்தா சாத்யம நூதித:‖

என்றபடி, அப்பரமாத்மாவை ஜீவாத்மா — தகப்பனாகவும், காப்பவனாகவும், தலைவனாகவும், தாங்குபவனாகவும், பொருளின் சொந்தக்காரனாகவும், ஆத்மாவாகவும், அனுபவிப்பவனாகவும் கொண்டு வழிபட வேண்டும். இந்த ஒன்பது வகை உறவில் இன்றைக்கு இந்த இருள் தருமாஞாலத்தில் உள்ள நமக்கு இயற்கையில் ஏற்படும் தலைவன்-தலைவி என்ற பதிபத்நீ பாவ உறவே எளிதானபடியால், அந்தவகையில் ஆழ்வார்கள் நமக்கு எடுத்துக் காட்டாய், கனி அன்ன கண்ணனைக் காதலனாகக் கண்டு தம்மை அவனது அடங்காக் காதல் கொண்ட தலைவியாக்கித் தமிழ்த்துறையின் நெறியில் நின்று அனுபவித்தார்கள். இவ்வாறு பக்திக் காதல் கொண்டு பரமனைக் காதலித்துக் கனிந்து கனிந்து பெருகிய அருளிச்செயல்வடிவாகிய தொடரில் இப்பொருளைப் பரகால நாயகியாய்ப் பரமனுக்குப் பாமாலை சூட்டிய திருமங்கையாழ்வாரின் இதயக் கனியின் இன்பச்சுவை காணலாம்.

## அன்பின் வழி

பழகு தமிழ்ச் சொற்களில் 'அன்பு' என்ற சொல்லுக்கு மிகவும் பெருமை உண்டு. அன்பே ஒரு தாய். இத்தாயிடத்திலிருந்து பிறக்கும் செல்வியே அருளாகும். அன்பு ஒருவரிடத்திலே சில பலன்களை நாடி மையமிடும். அருளோ உயிரினம் அனைத்திலும் ஒருமித்த, பலன் எதையும் நாடாமல் தானே மையமிடும். உள்ளம் கனியக் கனிய உணர்ச்சி உந்தக் கிளரும் 'மெய்ப்பாடே' அன்பாகும். இறைவனிடம் நாம் காட்ட வேண்டியது 'அன்பு'. உண்மையான பக்தி. இறைவன் நம்பால் காட்டுவது அருளாகும். இவ்விரண்டும் கலக்கும் மகாநதியின் சங்கமே கங்கை யமுனை சேர்க்கையாகும். இதுதான் பிரயாகை. இங்குதான் விஷ்ணுபாதம் இருக்கும். அன்பு உயிர்களின் தனித்த நிலையில் ஏற்படாது. இரண்டு உள்ளமும் கூடும்பொழுது "அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்" என்ற அடிப்படையில் உண்டாகும் சிநேக ரஸமாகும்.

அன்பில்லாத உயிர்வாழ்க்கை பாறையின் இடுக்கில் வளரும் மரத்தை ஒக்கும். 'அன்பின் வழியது உயிர்நிலை" என்பது திருக்குறள். உயிர் நிலை பெறுவது அன்பின் வழியில்தான். அறம் வளரப் பயன்படும் அதே அன்பு மறத்திற்கும் துணை நிற்கும் என்றார் திருவள்ளுவ நாயனார். எல்லாம் நிறைந்தவராய் எங்கும் உள்ளவராய், எல்லாம் வல்லவரான கடவுளை நாம் அன்பென்னும் சிறு நூலால் நகரமுடியாமல் கட்டிப் போட்டு விடலாம். "அன்பிலன்றி ஆழியானை யாவர் காணவல்லரே" எனத்திருச்சந்தவிருத்தம் அருளியது. நம்மாழ்வார் எம்பெருமானை அன்புடனழைக்கையில் "கோலமலர்ப் பாவைக்கு அன்பாகிய என் அன்பே" எனவே அருளினார். இந்த அன்பின் அடைப்படையில் இறைவன் அருளைப் பெறவும், ஆன்மா விடுதலைபெறவும் வழிகாட்டிய மதமே ஸ்ரீ வைணவமாகும். இதற்கு "அன்பு மதம்" எனவும் பெயர். ஆழ்வார்களே இந்த எளிய இன்பமான வழியை நமக்குக் காட்டினார்கள். அவர்களின் அமுதவல்லிபோன்ற அருளிச்செயல் பாசுரங்கள் இத்தகை உழுவலன்பை உரமாகக்கொண்டு பீறிட்டன. இவர்களின் திருவாக்கிற்கு மணமும் உண்டு, சுவையும் உண்டு. அமுதனார் 'திருவாய்மொழி மணம்தரும் இன்னிசை மன்னும் இடந்தொறும்' என அருளினார். இவ்வொழுக்கத்தைத் "தெய்வீகக் காதல் ஒழுக்கம்" என்பார்கள். சிலர், மெய்யடியார்களான முற்றும் துறந்த ஆழ்வார்கள், உலக இயலில் காணும் "காதல்" என்ற துன்பச் சுவைக்கு ஏற்றம் தந்து, தாமும் காதலர்கள் நிலை எய்தி, இறைவனை வழிபடுவது முறையாகுமா? இது ஒரு இழிந்த காமம் அன்றோ? எனவும் சொல்லலாம். அவ்வாறு கூறுவது ஒருக்கால் துறவுத்துறைக்குப் பொருந்தலாம். ஆனால் "கண்ணனுக்கே ஆவது காமம்" என்ற உறுதி கொண்டு வேதாந்த வழியை விளக்கும் நம்மாழ்வாரின் சம்பிரதாயமான ஸ்ரீவைணவத்துக்கு ஏற்காது. ஈட்டுரையில் இதனைப்பற்றிய அருமையான விளக்கம் காணலாம். பொதுவாகப் பரந்து காணும் அன்பு நிலையைப்பற்றிக் கூறும் தொல்காப்பிய உரையில்,

"ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடுங்காலத் துப்பிறந்த பேரின்பம், அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக் கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறு இருந்ததெனக் கூறப்படாத தாய் யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பம் உறுவதோர் பொருளாதலின் இதனை அகம்" எனக் கூறியதின் நரம்பை அறிந்தால் தெய்வீகக் காதல் இழிந்த காமமாகாது என உணரலாம்.

## ஆழ்வார் வழி

"தொண்டர்க்கு அமுதுகொலோ" "பார்பரவின்கவி" "அடியார்க்கு இன்பமாரி"என்றெல்லாம் புகழ்ந்து போற்றப்பட்ட ஆழ்வார்களின் அருளிச் செயல்களில் இத்தகைய சுக ஒழுக்கத்தின் விரைவும், நிறைவும் எழுத்தெழுத்தாய் சூழல் கொண்டிருக்கும். அகத்தின் நிறைவில் அலமந்து பாடிப்பரவிய ஆழ்வார் "ஞானத்தில் தன் பேச்சு, பிரேமையில் பெண் பேச்சு" என்ற நிலையிலேயேபேசினார் என்பதைத் திவ்வியப் பிரபந்தங்களில் ஆழங்கால் பட்ட நெஞ்சறியும். "ஆழ்வாரின் அடங்காக்காதல் நிலையைப்பற்றி, ஈட்டில் எம்பெருமான் பக்கல் பிறந்த ஆசை முதிர்ந்து நினைத்தபடி பெறாவிட்டவாறே சோக மோதங்கள் பிறக்கும் இப்படியுள்ள கலவியாலும் பிரிவாலும், ஆழ்வார்க்கு வந்ததசை ......"எனக் கூறப்பட்டமை காணலாம். பொதுவாக ஆழ்வார் தம் பகவதனுபவ நிலையில் "முதன் முதலில்" "உன்னைக் காணும் ஓர்

ஆசை'' என்றும், "கோலத் திருமாமகளோடு உன்னைக் கூட்டாதே'' என்றும் பேசி, "ஒரு நாள் காணவாராயோ'' எனவும் கெஞ்சி நிற்பர். ஆழ்வாரின் வேண்டுகோளை ஏற்று இறைவன் எதிரே நின்று தன் உருவம் காட்டினுல் "ஆவிக்கோர் பற்றுக்கொம்பு நின்னலால் அறிகின்றிலேன்'' "களைவாய் துன்பம்'' என்றும் அப்பொழுதும் இறைவன் பிரிந்து விடுவனே என்ற சந்தேகம் முதிரக் குழம்பியேபேசுவர். இத்தகைய ஆழ்வாருக்குக் கண்ணனைக் காண்பதற்கு முன்பும், பின்பும் இரக்மும் வருத்தமும் தான். இக்கருத்தை ஆழ்வார் மிகமிக அருமையாக "நீயாள வளையாளமாட்டாயே'' என்ருர். இவ்வாறு கண்ணன், ஆழ்வாரிடமிருந்து அமுதத் தமிழ்வெள்ளம் பெருகவே, தன்னைக் காட்டிக் காட்டி மறைப்பன். அபலையாய்த் தன்னை ஆக்கிக்கொண்ட ஆழ்வாருக்குத் திடரெனச்சீற்றமும் ஊடலும் பிறக்கும்; "உன்னுடைய சுண்டாயம் நானறிவேன்'' "பந்தும் கழலும் தந்து போகு நம்பி'' எனப் பராங்குச நாயகியும், ''மறுத்துப் புறமே வந்து நின்றீர் ஏதுக்கு இது? என் இது? என் இது?'' எனப்பரகால நாயகியும், "ஏர் மலர்ப் பூங்குழல்'' எனக் குலசேகரனும் பேசுவார்கள். இந்த ஊடல் நிந்தைக் கன்றே உத்தம புருஷன் ஏங்குகிறுன். அன்புக்கு ஆழம் ஏது? தாழ்ப்பாள் ஏது?

## நண்டு தம்பதிகள்

பதியே பரவித்தொழும் திருமங்கையாழ்வார், சோழநாட்டுத் திருப்பதி எம் பெருமான் திருநறையூர் நின்றநம்பியைக் காணவிழைகிருர். கும்பகோணமிருந்து மருதநிலக் காட்சியும், முல்லை நிலக்காட்சியும் கருத்தைக்கவர்கின்றன. பாதையின் இருபுறத்திலும் சோலையும் வயலும், வரப்பும் திரைக் காட்சி போல் கண்களைக் கவருகின்றன. ஆழ்வாருக்குச் சிந்தனை எல்லாம் நம்பியின் மேல். நம்பியைக் காண எனக்கு ஆயிரம் நயனம் தராது விட்டானே பிரமன் என்ற எண்ண அலைகள் மோதுகின்றன. தெய்வக் காதல் அரும்பித்தளிர்த்து, பூத்து, பழுத்துவிடுகின்றது. நாற்கவிப் பெருமாள் அல்லவா திருமங்கை மன்னன்; நறையூர் நெருங்கிற்று. ஊரின் அருகே அருளாளர் உள்ளம் போல் தெளிந்த, நீர் ததும்பும் ஒரு பொய்கை தென்படுகிறது. பொய்கையில் இயற்கைக்கு மாருக ஒருபுறம் அல்லிமலர்களும், மற்ருேர் பக்கம் தாமரைமலர்களும், வாய் அலர்ந்து மகிழ்ந்து அசைகின்றன. அந்தமலர்களில் ஓர் ஆம்பல்மலர். அந்த ஆம்பல்மலரில் இரண்டு நண்டு தம்பதிகள் ஒருமித்த காதலுடன் குடும்பம் நடத்துகின்றன. அவை தன்னில் மனிதனும்வெட்கப்படும்படி உள்ளம் கலந்த ஒற்றுமை இன்பம். நள்ளி என்ருல் பெண்நண்டு. அலவன் என்ருல் ஆண்நண்டு. நள்ளி முதல் தடவை கருவுற்றது. இளம் வயதுப் பெண். அதுவும் கருவுற்றச் சமயம். தனிக்குடித்தனம் அதனுல் வெட்கம் மேலிட்டுநிற்கும். இடையே ஒரு விஷயம். பெண்களை சமஸ்கிருத அணிநூல்-முக்தா-மத்யா-ப்ரௌடா என மூன்று விதமாகப் பிரிக்கும். வெட்கம் மிஞ்சி நிற்கக் காதல் இன்பம் குறைவது-முக்தையின் நிலை, வெட்கமும், காதல் இன்பமும் சரிசமமாக இருப்பது மத்யையின் நிலை– காதல் வெறி மீறிட வெட்கம் அடங்கும் நிலை ப்ரௌடையின் நிலை- என.

முதலில் கருவுற்ற காலத்தில் பெண்களுக்கு ஏற்படும் "மசக்கை'' என்ற ஆசை பெண்நண்டிற்கு வலுத்தது. நறு மணத்தேன் பருக வேண்டும் என்ற ஆசை. இதைக் கணவனிடம் தெரிவிக்க வெட்கத்தால் முடியாமல் குறிப்பால் உணர்த்தியது. நாச்சியாருக்காகத் தன்நிலை எல்லாம் மாற்றி நின்ற நம்பியின் திவ்விய தேசமானதால், அப்பதியில் வாழும் ஆண் நண்டிற்கும் மனைவியின் உள்ளக் கிடக்கையைக் குறிப்பால் உணரும் ஆற்றல் இருந்தது. உடனே ஆண் நண்டு அலவன், மனைவிக்குத்தேன் கொண்டு வரத் தேன் சொட்டும்

தாமரை மலர்களை நாடிச் சென்றது. அதிகாலையில் தேன் கொணரச் சென்ற ஆண் நண்டு, மலரில் அமர்ந்தது. தேனைப் பருகிக் கொண்டே இருந்தது. மனைவியின் பேரில் ஆசையால், மேலும் மேலும் பருகிக் கொண்டே இருக்கிறது. பருகப்படும் தேன் தலைவனது வாயின் கடைவாயிலின் மற்றோர் பக்கம் வழிந்து அதே தாமரையில் தேங்குகிறது. ஆசை மிஞ்சிய நண்டுக்கு அது தெரியவில்லை. மாலை வந்தது. இயற்கையின் நிலையில் தாமரையும் மூடிக்கொண்டது. தேக்கு மரத்தையும் துளைக்கும் ஆற்றல் கொண்ட வண்டுக்குத் தாமரையின் இதழைத் தள்ளி வெளியே வருவது சிரமம் இல்லை. இருப்பினும் தன் மனைவிக்குத்தேன் தந்த தாமரையானதால், அம்மலரிடம் ஒரு அலாதிப் பரிவு. இரவெல்லாம் அந்த மலருக்குள் மனைவியை நினைந்து நினைந்து உலாவிக்கொண்டே இருந்தது. இரவு நேரத்தில் செழித்த தாமரையில் செழுமையான வண்டு அமர்ந்து "ஹும்" என்ற நாதமிடும். இத்தகைய வண்டு நாதத்தை இன்றும் இயற்கைக் காட்சியில் கேட்கலாம். இத்தகைய வண்டின் ஹுங்காரம் ஸப்த சங்கீத சுவரங்களில் ஒரு சுவரமாகும். விடிந்தது; தாமரை மலர்ந்தது. மலர்ந்த தாமரையிலிருந்து வெளிப்பட்ட வண்டின் உடலில் மலர்த்தாதுவும், சுண்ணமும் படிந்திருந்தன. தேனை மாந்திக் கொண்டு மனைவியைக் காணும் ஆசையினால் ஆண் நண்டு அல்லி மலரை நாடிக்களைத்துச் சோர்ந்து தயங்கிய நடையுடன் விரைந்து வருகிறது. அல்லி மலரில் குடிகொண்ட பெண் நண்டு இரவெல்லாம் கணவன் பிரிவினால் உறக்கமின்றி ஏங்கி அல்லி மலரின் இதழ்இடையே, பெண்கள் ஜன்னல் வழியே வெளியில் பார்ப்பது போல், கணவன் வழிமேல் விழி இட்டு இருந்தது. பெண் நண்டு விரைந்து வரும் காதலனைக் கண்டது. பெரும் மகிழ்ச்சி. மலர்ந்த முகத்துடன் மறுபடியும் உற்றுநோக்கிற்று. ஊடல் சுவை தோன்றியது. தலைவனின் உடலையும், தளர்ந்த நடையையும், கண் கலக்கத்தையும், சிகை புரண்ட தலையையும், பார்த்தது. அவ்வளவுதான் சீற்றம், கலக்கம் ஏமாற்றம், என்ற நிலைகள் வலுவுற்றன. இதற்குள் ஆண் நண்டு மலரின் அருகே வந்தது. அல்லி மலரானதால் காலை நேரத்தில் கதிரவனைக் கண்டதும் வெறுப்புற்று மூடிக் கொண்டது. இதை நோக்கியதும் ஆழ்வாரின் கற்பனைக் கருத்தில் திருவரங்கம் பங்குனி உத்தரம், மட்டையடி உத்ஸவம் நினைவுக்கு வந்தது. பரத்தையின் புணர்ச்சியால் ஏற்பட்ட நிலைமாற்றம் தான் தன் பிரிய நாயகனுக்கு ஏற்பட்டது என நினைத்து, பெண் நண்டு வருந்திக் கதவைத் தாளிட்டதோ? எனக்கருதி விட்டார். இத்தகைய இயற்கைக் காட்சியில் எல்லாம், நாச்சியாருக்கே உடைமையாய் பெண்ணரசு நாடோ எனப் பேசும்படியாய்ப் பிராட்டியாரின் (லக்ஷ்மி) ஆதிக்கம் கொண்ட நாச்சியார் கோயில் க்ஷேத்திரத்து நிகழ்ச்சி ஆழ்வாரின் பாவனையில் ஊறிப்பாவில் கொப்பளித்தது. இந்த இடத்துப் பெரியவாச்சான்பிள்ளை உரை நயம் படித்து இன்புறத்தக்கது. இந்த இன் சுவைப்பாடலின் இனிய பொருள் நயத்தை ஆசாரிய வள்ளல் பட்டர் விளக்கிக் கொண்டிருந்தார். அப்பொழுது பிள்ளை திருநறையூர் அரையர் என்ற ஆசாரியன் பட்டரைப் பார்த்து, "ஆராய்ந்து குற்றம் நிறம்பினால், பின்னையன்றோ தண்டிப்பது" என்று வினவினார். அதற்குப் பட்டர் 'என் செய்வோம்! கேள்வி இல்லாதபடி பெண்ணரசுநாடாய்த்தே" எனஇடம் கருதிய நயம் காட்டினார். திவ்ய தேசங்களில்: திருவரங்கத்தில் மகாலக்ஷ்மிக்கும், ஸ்ரீ வில்லி புத்தூரில் பூமா தேவிக்கும் நாச்சியார் கோயில் (தஞ்சை மாவட்டம்) நப்பின்னை என்ற நீளாதேவிக்கும் பிராதான்யம் எனச் சம்பிரதாய வழக்கு. ஆம். ஆண்கள் அரசாளும் நாட்டில் ஆண்களைப் பெண்களுக்குப் பர்த்தா - அதாவது - தாங்குபவன் என நியதி ஏற்பட்ட தற்கிணங்கப் பெண்ணரசு நாடான ஸ்ரீ வில்லி புத்தூரிலும் நாச்சியார் கோயிலிலும் பெண்களுக்கென வகுத்த சட்டத்தைப்பற்றி ஆண்கள் பேசத் தகுமோ?

முன்பு மாதவியிடமிருந்து பிரிந்து கண்ணகியின் பால் புரிந்த குற்றமுணர்ந்து, வெட்கி நின்ற கோவலன் கண்ணகியின் வீட்டில் தலை குனிந்து நிற்கக் கண்ணகி தன் மறுகால் சிலம்பையும் தந்து இதைக் கொண்டு மாதவியின் விருப்பத்தை நிறைவேற்றலாம் எனத் தந்தது கண்ணகிக்குக் கணவனிடம் உள்ள ஈடுபாடும்,கற்பின்பெருக்கமும் அன்றோ. இதற்கிணங்கிய பாரதியார் கூறிய சங்க நாதமாவது: "பட்டங்கள் ஆள்வதும்; சட்டங்கள் செய்வதும் பாரினில் பெண்கள் நடத்த வந்தோம். எட்டு மறிவினில் ஆணுக்கு இங்கே பெண், இளைப்பில்லை காண் என்று கும்மியடி" என. ஆக இவ்வளவு நயக் கருத்துக்களையும் உள்ளடக்கி, உள்ளம் குளிர வைக்கும் திருமங்கை ஆழ்வாரின் (சோலைக்கிளி) அருளிச் செயலின் பின்னிரண்டடிகள் காணீர்:

" பள்ளி கமலத்து இடைப்பட்ட பகுவாய்
அலவன்முகம் நோக்கி
நள்ளி யூடும் வயல் சூழ்ந்த நறையூர்
நின்ற நம்பியே



# கீதை காட்டும் நல்வழி

திரு. டி. கே. நாராயணன், M.Sc.
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.

## அத்தியாயம்–12
## பக்தி யோகம்

பகுதி — 7

அப்பியாஸ யோகத்தை வலியுறுத்த விரும்பிய பகவான் அர்ஜுனனை அன்புடன் 'தனஞ்ஜயா' என்று அழைக்கிறார். ஏற்கனவே இதற்கு முன் பல முறை கூறியது போல ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு பெயர் சொல்லி பகவான் அர்ஜுனனை அழைப்பதில் தனிப் பொருள் உண்டு.



இந்த இடத்திலும் 'தனஞ்ஜயன்' என்று அழைப்பதில் அவர் ஒரு முக்கிய கருத்தை வெளியிட விரும்புகிறார். யுதிஷ்டிரர் ராஜஸூயயாகம் நடத்திய பொழுது அதற்கான செல்வம் அனைத்தையும், அர்ஜுனன் பல தேசங்களுக்கும் சென்று அங்கிருந்த அரசர்களுடன் போரிட்டு, வென்று திரட்டிக் கொண்டு வந்து குவித்தான். 'அத்தகைய பராக்கிரமம் பொருந்திய அர்ஜுனா! உலகை வெல்லமுடிந்த உன்னால் உன் உள்ளத்தையும் வெல்ல இயலும். முடியாது என்று மனம் தளராதே. முயற்சி செய். வெற்றி உன்னுடையதே,' என்று அர்ஜுனனுக்கு உணர்த்தும் வகையில் 'தனஞ்ஜயன்' என்ற சொல்லை இங்கே பகவான் பயன்படுத்துகிறார். அர்ஜுனனுக்குச் சொன்னது நம் ஒவ்வொருவருக்கும் பொருந்தும். நம்மிடம் என்னவெல்லாம் திறமைகள் உள்ளன! இருந்தாலும் மனத்திற்கு அடிமைகளாக விளங்குகிறோமே? இல்லையா!

'அப்பியாஸ யோகமும் என்னால் இயலவில்லை, அதுவும் எனக்கு மிகக் கடினமாயிருக்கிறது. நான் எப்படி உம்மை அடைவது?' என்று எவராவது ஐயத்தைக் கிளப்பினால் அதற்கான பதிலை பகவான் அடுத்த சுலோகத்தில் தருகிறார்:

அப்யாஸேப்ய ஸமர்த்தோஸி
மத்கர்ம பரமோ பவ|
மதர்த்தமபி கர்மாணி
குர்வன் ஸித்திமவாப்ஸ்யஸி || 10 ||

'அப்பியாஸத்தில் உனக்குத் திறமை இல்லையாயின் என் பொருட்டுச் செயலாற்றுவதைக் குறிக்கோளாகக் கொள். எனக்காகக் கர்மம் செய்வதாலும் நீ ஸித்தியடைவாய்."

எந்த ஒரு செயலைப் பல நாட்களாகச் செய்து வந்திருக்கிறோமோ அதிலேயே திரும்பத் திரும்ப லயித்துப் போவது மனத்தின் இயல்பாகும். நாம் என்ன தான் முயற்சி செய்து மனத்தைத் திருப்ப முயன்றாலும் மனம் அதிலேயே சுற்றிக் கொண்டிருக்கும். இதைப் பழக்க வாசனை என்பர். தொடர்ச்சியான சாதனையில் மனம் ஈடுபட மறுக்குமேயானால் அதற்காக சாதனையையே விட்டுவிடுவது கூடாது - என்று பகவான் இங்கு அப்பியாஸ யோகத்திற்கு மாற்றாக ஒரு வழி கூறுகிறார்.

சாதனை என்பது மலர்கள் விரித்த பாதை அல்ல. அது இருமுனைக் கத்தி மீது நடப்பதற்கு நிகர் என்று தமது நூல்களில் அடிக்கடி குரு தேவர் ஸ்ரீ சுவாமி சிவானந்தர் வலியுறுத்துவது வழக்கம். அப்பியாஸம் அல்லது தொடர்ந்த சாதனை இயலவில்லை எனில் நாம் செய்யும் காரியங்களை பகவானுக்காகச் செய்வதன் மூலம்

இலட்சியத்தை ஒருவன் அடைய முடியும் என்று கண்ணன் ஈண்டு எடுத்துரைக்கிருர்.

அப்பியாஸ யோகம் பயில இயலவில்லை என்பது மனம் மட்டுமல்லாது உடலும் நமது கட்டுப்பாட்டிற்குள் இருக்க மறுக்கின்றது என்பதைக் காட்டுகிறது. அத்தகைய மனத்திற்கும் உடலிற்கும் ஓயாது வேலை கொடுத்துக் கொண்டிருக்கவேண்டும். புறத்தே பாயும் இயல்புடைய மனம் மற்றும் புலன்களை கட்டுப்படுத்துவது மிகவும் கடினமே. மனமும் உடலும் எங்கு ஒன்றிணையவில்லையோ ஆங்கு இரண்டிற்கும் ஒருங்கே உரிய வேலையைக் கொடுப்பது அவசியமாகிறது. அவ்வாறு மனமும் உடலும் செய்யும் வேலைகள் அனைத்தையும் இறைவனுக்கு அர்ப்பணித்துவிடுவது அவனருளைப் பெறுவதற்கு உற்ற சாதனமாகிறது. 'நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானே இதற்கு நாயகமே' என்ற வாக்கிற்கேற்ப செய்யும் கருமங்கள் மற்றும் அவற்றின் பலன்கள் அனைத்தும் இறைவனுக்கு அர்ப்பணித்து விடுகையில் கர்ம பலன்கள் நம்மை ஒட்டமாட்டா. ஆரம்பத்தில் அறியாமையால் செய்யப்பட்ட தீய கருமங்களும்கூட நாளடைவில் மறைந்து அனைத்தும் நல்ல காரியங்களாகவே மாறிவிடும்.

'நான் செய்கிறேன், எனக்குப் பலன் கிட்ட வேண்டும், என்னையன்றி இதைச் செய்ய வேறு யாருக்கு இயலும்?', என்பன போன்ற எண்ணங்களை அறவே மனத்திலிருந்து அகற்றி, 'நிமித்த மாத்திரமாக' அல்லது 'இறைவன் திருக்கரங்களில் செயல்படும் கருவியாக' கருதி செயல்பட்டால் நமக்கு இரட்டிப்பு லாபம் கிட்டும். எப்படி? முதற்கண் இறைவன் நம் மூலம் செயல்படுவதால் செய்யும் செயல்கள் அனைத்திலும் வெற்றியே தவிர தோல்வி என்ற பேச்சுக்கே இடமில்லை. இரண்டாவது, செயல்களின் விளைவில் அதாவது வினைப் பயனில் பற்றற்றுச் செய்யப்படுவதால் செய்கின்ற செயல்களும் நம்மைப் பந்தப்படுத்தமாட்டா. சுருக்கமாகச் சொல்லப் போனுல் இறைவனில் மனத்தை லயித்துச் செய்யப்படும் செயல்களால் பழைய 'வாசனைகள்' (பதிவுகள்) இல்லாதாகின்றன என்பதுடன் புதிய வாசனைகள் எழாது போகின்றன. இத்தகைய நிலையே முக்திக்கு அடிப்படையாகும். புலன்கள் மற்றும் மனமானது ஓயாது பற்றற்ற நிலையில் 'பொது நலத்திற்காக'ப் பணியாற்றிக் கொண்டிருத்தலையே கீதை திரும்பத் திரும்ப வலியுறுத்துகிறது.

# இராமனுசப் போற்றி மலர்கள்

கவிரத்ன வித்துவான். காஞ்சி அமிழ்தன் - சென்னை.

திருவிலே தோன்றி தூய
சிறப்புக ளனைத்தும் பெற்றே
இருளிலே உழலு கின்ற
எல்லோரு முய்ய நாளும்
அருளொளி யூட்டும் ஞான
அந்தணன் யத்தி ராசன்
பெருமையைப் பாடு கின்றேம்
பரந்தாமன் தாள்கள் போற்றி!

உடையவன் பெரும்பூ தூரை
உடையவன் உலகோர் நெஞ்சில்
உடையவன்; மறைக ளெல்லாம்
உடையவன் கருணை யுள்ளம்
உடையவன் கவிஞன் பாட்டில்
உடையவன்; மணக்குந் தொங்கல்
உடையவன்; அடியார் கோடி
உடையவன் அடிகள் போற்றி!

வாக்கினுல் மனத்தால் மெய்யால்
மலர்தலே தவவொ ழுக்கம்
தாக்கினுல் கூட மெள்ளச்
சிரித்தலே தருமம்; வேத
நோக்கினை யுணர்தல் வேண்டும்
நெஞ்சிலே ஈரம் வேண்டும்
வாக்கழ கண்ணல் தூய்மை
உடையவன் சொன்னுன் போற்றி!

பாவியர் பாவந் தீர்க்கும்
பரமனை வேண்ட தீய
தீவினைப் போக்கும் ஆதித்
தேவனை வணங்க மேலாம்
ஆவியாம் அமர ரேத்தும்
அருட்கோலவைக் காண; மக்கட்
சேவையே சிறந்த தென்னும்
செம்மலின் சேவைப் போற்றி!

நெஞ்சினில் தூய்மை யோடு
நித்தியா னந்தத் தோடு
வஞ்சமில் தவத்தி னேடு
வண்டமிழ்ப் பண்பி னேடு
வெஞ்சின மில்லா ஞான
வித்தக வேள்வி யோடு
செஞ்செவி கொண்ட ஆதி
சேஷனின் தாள்கள் போற்றி!

கருணையில் நீந்தும் பார்வைக்
கவலையைப் போக்கும் மேனி;
இருளினைத் துரத்து கின்ற
இருகாது குண்ட லங்கள்!
சிரிக்கின்ற செவப்புப் பச்சைச்
சிங்கார மின்னல்; மாலைப்
புரிக்குள்ளே நுழைந்தே வந்தான்
புவியாளும் யத்தி ராசன்!

**வேறு**

கலையுடையாய்க் காந்தியொளிர் முகமுடையாய்அன்பர்க்
கண்ணீரைத் துடைக்கின்ற தங்கக்கர முடையாய்!
சிலைவடிவாய் நிலைபெற்ற சிறப் புடையாய் செம்மால்
செந்தமிழால் உனைப்பாட சிந்திக் கும் திறனை
மலையன்ன தோள்களினை உடை யவனே அருளாய்!
மங்காத பெரும்பூதூர் மன்ன வனே தருவாய்!
கலைமறந்து நிலையிழந்து தவிக் கின்ற எளியேன்
கரங்குவித்து வணங்குகிறேன் கலைச்செல்வ மீவாய்!



ஆசை நம்மைச் சீரழிக்காத நிலையில் மனமும் உடலும் ஒன்றிணைந்து செயல்படும். ஏனைய அனைத்தையும் மறந்து செய்யும் செயலில் பூரணமாக ஒன்றித்து விடுதலே வெற்றிக்கான திறவுகோலாகும். மனத்தின் அலைகளும் அடங்கும்.

மத் கர்ம பரம :- எனக்காகவே செயல் செய்வது (அதாவது அனைத்தையும் 'கிருஷ்ணார்ப்பணம்' ஆக்கி விடுவது) இதுவும் முடியவில்லையாகில்,

**அதைதத்தப்யசக்தோ஽ஸி**
**கர்த்தும் மத்யோகமாச்ரித:**
**ஸர்வ கர்ம பலத்யாகம்**
**தத: குரு யதாத்மவான் ‖ 11 ‖**

'இனி இதைச் செய்தற்கும் இயலாதெனில் என்னிடம் அடைக்கலம் அடைந்தவனாய் தன்னடக்கம் கொண்டு வினைப்பயன் முழுவதையும் எனக்கு அர்ப்பணம் செய்வாயாக'.

பகவான் படிப்படியாக தம்மை அடைவதற்கான மார்க்கத்தை எளிது படுத்திக் கொண்டே வருகிறார். கர்மங்கள் அனைத்தையும் பகவானுக்கு அர்ப்பணித்தல் முதல் நிலை. மனம், மற்றும் புத்தியை இறைவனிடம் லயிக்கச் செய்வது அடுத்த நிலை. ஒன்பது வகையில் அமையும் பாகவத தர்மங்கள் அல்லது நவதா பக்தியில் ஈடுபடுதல் அதற்கு அடுத்த நிலை.

**श्रवणं कीर्तनं विष्णोः**
**स्मरणं पादसेवनम्**
**अर्चनं वन्दनं दास्यं**
**सख्यं आत्मनिवेदनम् ॥**

நவதா பக்தி எனப்படும் ஒன்பது வகை பாகவத தர்மங்களின் அங்கங்கள் கீழ்வருமாறு :

சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதஸேவனம், அர்ச்சனம், வந்தனம், தாஸ்யம், ஸக்யம், ஆத்ம நிவேதனம்.

சிரவணம் : ஹரிகதை அதாவது இறைவனின் ஒப்பற்ற பக்தியுடன் கேட்டல்.

கீர்த்தனம் : தன்னை மறந்து அவன் நாமங்களைப் பாடுதல். இதை குருதேவர் சிவானந்தர் 'சங்கீர்த்தன யோகம்' என்றே அழைப்பார்.

ஸ்மரணம் : இடையறாது இறைவனை நினைந்து நிற்றல், அவனது மந்திரங்களை நாவில் பூஜித்தல்.

பாதஸேவனம் : அவனுக்குப் பாத ஸேவை செய்தல் (இறையுருவில் தோன்றும் மகான்களது பாதங்களுக்குச் செய்யும் பூஜையும் இதில் அடங்கும்)

அர்ச்சனம் : மலர்களால் அவனை அர்ச்சித்தல்

வந்தனம் : இறைவனுக்கு முன்னர் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்காரம் செய்தல்.

தாஸ்யம் : தன்னை அவனது சேவகனாக, அதாவது, தொண்டனாகக் கருதி 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற மனப்பாங்குடன் இறைவனுக்கும் அவனது படைப்புக்களுக்கும் தொண்டு செய்தல்.

ஸக்யம் : இறைவனுடனும் அவன் படைத்த அனைத்து உயிர்களுடனும் அன்புடன் இருத்தல்.

ஆத்ம நிவேதனம் : தன்னையே அர்ப்பணமாக அவனுக்கு அளித்தல்.

இத்தகைய பாகவத தர்மத்தையும் கடைப்பிடிக்க முடிக்கவில்லையெனில் அடுத்த எளிய வழியை மேற்காணும் சுலோகத்தில் பகவான் தெரிவிக்கிறார். "ஆசைக்கு வயப்பட்டவன் நான். ஆசையற்றிருப்பது என்னால் முடியாது. எனவே ஆசைகளால் உந்தப்பட்டு செயல் புரிவது எனது இயல்பு. இந்த நிலையில் உய்யும் மார்க்கம் எனக்கு எது?' என்று கேட்கும் பக்தனின் தர்ம சங்கடநிலையைப் புரிந்து கொண்ட பகவான், 'இதெல்லாம் ஒன்றும் உன்னால் முடியவில்லையாகில் அதற்காகக் கவலைப்படாதே. கடமை உணர்ச்சியுடன் நீ செயல்களைச் செய். செய்யும் செயல்களின் பலன் அனைத்தையும் துறந்து விடு. தன்னடக்கத்துடன் செயல் புரி'' என்று கூறுகிறார்.

''நல்ல செயல்களின் பலனையும் விட்டுவிட வேண்டுமென்றால் நான் எதற்காகக் கர்மம் புரிய வேண்டும்? செயலும் புரிந்து கொண்டு அதிலுள்ள வெற்றி தோல்விகளை எதிர் பாராதிருத்தல் எங்ஙனம் சாத்தியமாகும்?'', என்ற ஐயம் இங்கே எழலாம். செயல் ஒன்றால் அதற்கு ஒரு பலன் அல்லது விளைவும் உண்டு. அது வெற்றியாகவோ அல்லது தோல்வியாகவோ அமையும். தோல்வியையும் விரும்புவார் எவருமில்லை. அனைவரும் வெற்றியையும் இன்பத்தையுமே விரும்புகின்றனர். இதை அறிந்த பகவான், ''அப்படியாயின் நீ செயல்களைச் செய். செய்வதற்கு முன்னர் 'நான் செய்யும் இந்தச் செயலில் வெற்றி அல்லது தோல்வியில் எனக்கு விருப்பம் ஏதும் இல்லை. எல்லாம் உன்னுடையதே. நானோ குழந்தை. நீயே என் தாய். எனக்கு வேண்டியது உனக்கல்லவோ தெரியும். எனக்கு நலம் பயப்பது எதுவோ அதை நீ எனக்குக் கொடு. ஆனால் நான் என் செயலை மனப்பூர்வமாகச் செய்வேன். எனது முழுத் திறமையையும் அதில் தான் செலுத்துவேன். இருளிலிருந்து ஒளிக்கு என்னை அழைத்துச் செல்வது உன் பொறுப்பு' என்று பிரார்த்தனை செய்துவிட்டு செயலில் ஈடுபடு,'' என்கிறார். செயல் முடிந்த பிறகும் இது போன்ற பிரார்த்தனை செய்ய வேண்டும். செயலில் ஈடுபட்டிருக்கையில் மனம் ஆசைகளின் பின்னே அலைந்து திரிந்தால், ஏற்கனவே செய்த பிரார்த்தனையை நாம் அதற்கு நினைவுபடுத்த வேண்டும். இந்த முறையால் மனம் தூய்மை அடையும். சுயநலத்திலிருந்து விடுபடும். பற்றற்றுப் பணி புரிவதில் தேர்ச்சி வந்தமையும். இறையருள் தானாக நம் மீது வந்து சுரக்கும். மனம் இறைவனிடம் லயித்து நிற்க, புலன்கள் செயலில் தாமாகத் திறமையுடன் ஈடுபட்டுக்கொண்டிருக்கும். அந்த நிலையில் செய்யும் கருமங்கள் யாவும் இறைவனுக்குச் செய்யும் ஆராதனையாக அமையும்.

மத்யோகம் : எனது யோகம்—எல்லாச் செயல்கள் மற்றும் அவற்றின் பலன்களையும் எனக்கு அர்ப்பணித்தலே எனது யோகம்.

ஸர்வ கர்ம பலத்யாகம்: செயல்கள் அனைத்தினுடையவும் பலனைத் தியாகம் செய்தல். இது தான் தியாகத்திற்குப் பகவான் தரும் விளக்கம் ஆகும். காம்ய கர்மத்தைத் துறத்தல் அதாவது பலனில் பற்று வைத்த செயல்களை விடுதல் சந்நியாசம், ஸர்வ கர்ம பலனைத் துறத்தல் தியாகம் என்று 18-ம் அத்யாயம் 2-ம் சுலோகத்தில் சந்நியாசம் மற்றும் தியாகத்திற்கான விளக்கத்தைப் பகவான் தருகிறார். அதை ஈண்டு நாம் நினைவுபடுத்திக் கொள்ளுதல் வேண்டும்.

(தொடரும்)

# படையினரின் சமய வாழ்வு

மேஜர் தி. சா. ராஜு
ஜபல்பூர்-11

பச்சை உடை அணிந்த போதிலும் பட்டாளக்காரன் பாரதவாசிதானே! அவனுடைய சமய உணர்வு எங்கே போகும்?

பாரதநாட்டின் எல்லைப்புறத்தில் பயங்கரமான வேகத்தில் பாயும் பற்பல காட்டாறுகள் உள்ளன. அவைகளைக் கடக்கும் பொருட்டுப் பாரதப் படையினரின் பொறி இயல் பிரிவினர் பாலம் அமைத்திருக்கிறார்கள். அணை கட்டியிருக்கிறார்கள். அங்கெல்லாம் ஒரு மூலையில் சிறு ஆலயம் ஒன்றிருக்கும். அதில் ஓர் ஆஞ்சனேயர் அல்லது பிள்ளையார் உருவம் காணப்படும். பாலத்தைக் காவல் காக்கும் படை வீரன் அங்கே சிறிய அகல் விளக்கேற்றி வைப்பான். அவன் எந்தச்சமயத்தினனாக இருந்தாலும் சரி, இப்படி செய்தால் அந்தவழியே செல்பவர்களுக்கு எத்தகைய இடையூறும் ஏற்படாது என்று அவர்களிடையே ஒரு நம்பிக்கை.

போர்க்களத்திற்குப் புறப்படுமுன்பு தானைத்தலைவருக்குத் திலகமிட்டு ஆலயப்பிரசாதம் அளிக்கும் வழக்கம் அலெக்சாண்டர் காலத்திலேயே (கி.மு. 326) இருந்தது. அது இன்றும் தொடர்கிறது என்றால் வியப்படையவேண்டாம்.

சீக்கியப் படைப் பகுதி முன்னணிக்குப் புறப்படுமானால் கிரந்தி உடைவாளை ஏந்திநிற்பார். மஞ்சள் பட்டில் கிரந்த சாகிப்பைப் பொதிந்து தானைத் தலைவரிடம் அளிப்பார்.

வாஹேகுருஜிகா கால்ஸா,
வாஹே குருஜிகி ஃபதே

என்ற ஒலி வானை அளாவும். (வாஹே குரு - பரம்பொருள்) மராட்டியப் பகுதியானால் ஜய ஜய பவானி. டோக்ராக்கள் ஜய ஜய துர்க்கா. கங்கை நீர், துளசி தளம் இன்றி எந்தப் படையும் போருக்குப் புறப்படாது.

இரு நூறுக்கு மேற்பட்ட சமயப் பிரிவினர் ஒருபடைப்பகுதியில் இருந்தால் அவர்களுக்கு ஒரு சமய குரு உண்டு. அது ஹிந்துவோ, சீக்கியரோ, இஸ்லாமியரோ, புத்தரோ, எவரானாலும் சரி. (புத்த சமயப் பிரிவைச் சேர்ந்தவர்களும் பெரும் எண்ணிக்கையில் பாரதப் படையில் இருப்பது பல பேருக்குத் தெரிந்திருக்காது.)

நாடு விடுதலை அடையுமுன்பு சமய பணிபுரிந்தவருக்கு ஒரு கடை நிலை ஊழியனின் அந்தஸ்துதான் இருந்தது. தற்போது அவர் ஒரு ஜூனியர் கமிஷன்ட் அதிகாரி. சமய ஆர்வமும், தொண்டுணர்ச்சியும், மொழித்தகுதிச் சான்றும் பெற்ற இளைஞர்களுக்கு இத்துறையில் பணிபுரிய ஒரு நல் வாய்ப்பு இது.

படையில் பணி புரிபவனின் சமயச் சடங்குகள் அனைத்தையும் - தர்ப்பணம், சிராத்தம், நாமகரணம், ஈமச் சடங்கு உட்பட — அந்தச் சமயகுரு கவனித்துக் கொள்ளுவார். சமய சம்பிரதாயங்கள் குறித்து படைத்தலைவருக்கு ஆலோசனை கூறவேண்டியவர் இந்தச் சமயகுருவேயாகும்.

ஒவ்வொரு படைப் பகுதியிலும் வழிபாட்டுத்தலம் இருக்கும். பனி மூடிய பங்கர்களினிடையேயும், ஒரு சிலுவையோ, மஞ்சள் கொடியோ, திரிசூலமோ தலைகாட்டும். ஒவ்வொரு மாலையும் அங்கு வழிபாடு நடக்கும். ஹிந்துக்களின் மந்திரில் ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் தீ வளர்ப்பதுண்டு. ஓமத் தீயிலிருந்து பூர்ணாஹுதியும் பெறுவார்கள். சமய போதனைகள் நிகழும். படையினரும் தமது குடும்பத்துடன் அங்கு பங்கு கொள்ளுவர்.

படைப்பயிற்சி அளிக்கப்படும் பல கேந்திரங்களில் சிறப்புமிக்க ஆலயங்களும், குருத்வாராக்களும் கட்டப்பட்டுள்ளன. அவைகள் படையினரின் உடலுழைப்பால் நிறுவப்பட்டவை. அவர்களுடைய எளிய காணிக்கையினால் எழுப்பப்பட்டகோயில்கள் அவை. மீரட், அயோத்தி, பரோடா பெல்காம், சிகந்திராபாத் ஆகிய இடங்களிலுள்ள மிலிட்டரி மந்திர்கள் புகழ்பெற்றவை; கலைச்சிறப்புடையன.

டோக்ரா ரெஜிமெண்டில் செவ்வாயன்று இரவு எல்லோரும் உபவாசம். உணவே தயாரிக்கப்படாது. சிறப்பு நாட்களில் மதுவும் இறைச்சியும் விலக்கப் பெறும். ஜன்மாஷ்டமியன்று எவரும் உணவுகொள்ள மாட்டார்கள். நள்ளிரவுக்குமேல் கிருஷ்ணன் பிறந்த நேரத்திற்குப் பிறகு பிரசாதம் வழங்கப்பெறும்.

ஒவ்வொரு ஜவானுடைய 'கிட்'பையிலும் சிறிய புத்தகம் ஒன்றிருக்கும். அதனைப் பிரித்துப் பார்த்தோமேயானால் கீதை, ராமசரிதம், விவிலியம், ஜப்ஜி, அருட்பா போன்ற சமய நூல்களில் ஏதாவதொன்று இருக்கும்.

ஸ்ரீஇராம நவமி, கிருஷ்ணஜயந்தி, ஹோலி, ரம்ஜான், குருகோவிந்தர் தினம், கிறிஸ்துமஸ் ஆகிய பண்டிகைகள் மிகச்சிறப்பான முறையில் கொண்டாடப் பெறும். சமய பேதமின்றி எல்லோரும் இந்தப் பண்டிகைகளை மகிழ்ச்சியுடன் அனுபவிப்பார்கள்.

பாரதப் பவடயினன் திண்மையும், திறமையும் உடையவீரன். அவனுக்கு அந்த நற்குணங்களை அளிப்பது சமய உணர்வு. அதை மேன்மேலும் வளரச் செய்கிறது நமது பண்டைய படை மரபு.





# மகா சிவராத்திரி

அ. ஆ.

சிவராத்திரி ஐந்து வகைப்படும். அவை நித்திய சிவராத்திரி, பட்ச சிவராத்திரி, மாசசிவராத்திரி, யோக சிவராத்திரி, மாக சிவராத்திரி அல்லது மகா சிவராத்திரி என்பனவாம். ஓர் ஆண்டிலே பன்னிரண்டு மாதங்களிலும் சுக்கில பட்சம், கிருஷ்ணபட்சம் என இருபட்சங்களிலும் வரும் இருபத்துநான்கு சதுர்த்தசிகள் உள. இவையே நித்திய சிவராத்திரியாம். தை மாதத்திலே கிருஷ்ணபட்சப் பிரதமை முதல் பதின்மூன்றுதினமும் ஒரொருபோது உண்டு பதிநான்காம் நாளாகிய சதுர்த்தசியிலே சிவபெருமானை ஆராதித்தல் பட்சசிவராத்திரியாம். மாசி மாதத்திலே கிருஷ்ண பட்சசதுர்த்தசி, பங்குனியிலே முதல் திருதியை, சித்திரையிலே கிருஷ்ண பட்ச அஷ்டமி, வைகாசியிலே முதல் அஷ்டமி, ஆனியிலே சுக்கிலபட்ச சதுர்த்தி, ஆடியிலே கிருஷ்ணபட்ச பஞ்சமி, ஆவணியிலே சுக்கிலபட்ச அஷ்டமி, புரட்டாசியிலே முதல் திரயோதசி, ஐப்பசியிலே சுக்கில பட்ச துவாதசி, கார்த்திகையிலே முதல் சப்தமி, பின்வரும் அஷ்டமி, மார்கழியிலே இருபட்சங்களிலும் வரும் சதுர்த்தசிகள், தையிலே சுக்கிலபட்சத் திருதியை, இவை மாச சிவராத்திரியாம். பிரமா, விஷ்ணு, உமாதேவி, சூரியன் உருத்திரன், குமாரக்கடவுள், சந்திரன் ஆதிசேஷன், இந்திரன், சரஸ்வதி மனோன்மணி, நந்தி ஆகியவர் முறையே மேலே கண்ட மாதங்களில் சிவராத்திரி விரதம் அனுஷ்டித்து இஷ்ட சித்தி யெய்தினர் என்று புராணம் கூறும். சோமவாரத்திலே பகலும் இரவும் பூரணமாய் அமாவாசையிருப்பின், அது யோக சிவராத்திரியாம். ஒவ்வொரு வருடமும் மாசி மாதம் வரும் கிருஷ்ண பட்சம் சதுர்த்தசியே மகாசிவராத்திரியாம்.

## தத்துவார்த்தம்

சிவம் : எதனிடத்தில் எல்லா உலகங்களும் அடங்கிக்கிடக்கின்றனவோ, எது விவாதம்இல்லாததோ, எல்லாப் பாபங்களையும் எது நீக்கி விடுகிறதோ, எது சுகமயமானதோ, மங்களகரமானதோ அது சிவம். அது எல்லா உலகங்களையும் உயிர்களையும் தன்னுள் அடக்கிக்கொண்டு கருணைக்கடலாக இருப்பது; அது லோகரூபி, ஜகதாத்ர, சாக்ஷிஸ்வரூபம். எல்லையற்ற கடல்போன்று அகண்டமான சிவமே பரதத்துவம்; அது பல விபூதிகளோடு கூடியும் பல பெயர்களால் சொல்லப்பட்டும் வணங்கப்படுவது.

இராத்திரி : சுகத்தைக் கொடுப்பது, ஆனந்தத்தைக் கொடுப்பது, எல்லாப் பொருள்களுக்கும் ஆதாரமாய் இருப்பது. இக்காரணம் பற்றிப் பராசக்தியாகவும், கர்கா, சிவா என்ற பெயராலும் துதிக்கப்படுவது. ஆகையால், இந்த ராத்திரி ஆனந்தத்தை அளிப்பதும் சிவத்தோடு சம்பந்தப்பட்டதுமானதால் சிவராத்திரி.

சிவராத்தி : இராத்திரி என்பது பிரளயம், பகல் என்பது சிருஷ்டி. இராத்திரி காரணம், பகல் காரியம். இராத்

திரி காலத்தில் இந்திரியங்கள் வெளிப் போகாது அகமுகப்படும். அதனால் இராத்திரியில் விஷயங்களை விட்டு ஆத்மாவை நாடுதல்; அநேகத்தை விட்டு ஏகத்தை நாடுதல்; பேதத்தை விட்டு அபேதத்தை நாடுதல்; சிருஷ்டி விட்டு அதன் காரணத்தை அடைதல் சம்பவிக்கும்.

சதுர்த்தசி : அமாவாசை என்பது சூரியனும் சந்திரனும் ஒன்றாய் இருக்கும் தினம். அத்தியாத்மகமாகச் சொல்லின், பரமாத்மா ஜீவாத்மா இரண்டும் இரண்டறக் கலந்து நிற்றலே அமாவாசையாம். இந்நிலையில் உபாசனை, உபவாசம் முதலியன செய்தல் இயலாது. ஆகையால், அதற்கு முதற்றினம் சதுர்த்தசி அல்லது ஏக பாவத்திற்கு நெருங்கிய நிலையில்தான் அவை இயலும். அமாவாசையில் இரண்டறக் கலந்த நிலைமையில் விரதம் பூர்த்தியாகும். இதுவே பாரணையாகும்.

மாசிமாதம் கௌர வருஷத்தின் முடிவு. சதுர்த்தசி பட்சத்தின் முடிவு. முடிவுஎன்பது லயம்அல்லது ஒடுக்கம் அல்லது பிரளயம். புது வருஷம் என்பது சிருஷ்டி ஆரம்பம். சதுர்த்தசி யன்று சந்திரன், சூரியனுக்குச் சமீபத்தில் வருகிறது. அதாவது சந்திரன் என்னும் ஜீவாத்மா சூரியனாகிய பரமாத்மாவெனும் சிவத்தின் சமீபத்து வருதல். ஆதலால் சிவராத்திரி புண்ணியதினம்.

இச்சிவராத்திரி விரதத்தை அனுஷ்டிப்பவர்களுக்கு உபவாசம், கண் விழிப்பு, சிவ பூஜை எனும் மூன்றும் முக்கியமான அம்சங்கள்· விரதம் என்பது வேதத்தில் சொல்லப்பட்டதும், விரும்பிய பலனைக் கொடுக்கக் கூடியதுமானது. எதனால் பகவானின் திருவருள் சித்திக்கின்றதோ அதுவே விரதம். எல்லா விரதங்களுக்கும் பொதுவானவையும் இன்றியமையாதவையுமான சில குணங்களாவன:—

பொறுமை, வாய்மை, தயை, தானம், ஈகை, தூய்மை, புலன்களை அடக்கல், பூசை, அக்கினியை வழிபடுதல், சந்தோஷம், பிறர்பொருள் விரும்பாமை என்று பவிஷ்யபுராணம் கூறும்.

உபவாசம்:— சமீபித்திருத்தல். அதாவது ஜீவாத்மா பரமாத்மாவினிடத்தில் சமீபத்துச் சேர்ந்திருத்தல்; பட்டினியிருப்பது அதற்குரிய சாதனங்களிலொன்று. இது வராக உப நிடதக்கருத்து. பாவங்களை விட்டுப் புண்ணிய குணங்களோடு கூடி இருப்பது. அதாவது எல்லாப் போகங்களையும் விட்டு யோகத்தோடும் கூடி நிற்றல் என்பது பவிஷ்ய புராணம்.

சிவத்தியானம், ஜபம், அபிஷேகம், சிவகதை கேட்டல் முதலிய சற்காரியங்களைச் செய்தல் உபவாசம்என்று தேவி புராணம் கூறுநிற்கும்.

உபவாசம் என்பது ஆகார நிவர்த்தி. ஆகாரமாவது மனம் புத்தி இந்திரியங்கள் மூலமாக உட்கொள்ளப்படுவது. உபவாசமென்பது சாந்தம், சிவம், அத்வைதம் என்று மறைகள் கூறும் பரம்பொருளின் சமீபத்திலிருத்தல். இதற்கு மனம், புத்தி, இந்திரியங்களின் வியாபாரங்களை ஒடுங்கச்செய்து ஒழித்தல் இயல்பாகும்.

## விரதகதைகள்

சிவராத்திரி விரதத்தை அநுஷ்டித்து முக்தி பெற்றவர் பலர். அவராவார் :— குருத்ருஹன், விபரி, கன்மாடபாதன், சௌமினி, சுகுமாரன், குபேரன், சாலிகோத்திரன், வேதநிதி. இது புராணத்தில் பரக்கச் சொல்லப்பட்டிருக்கின்றது. இக்கதைகள் எப்போது சம்பவித்தன, தேசம் எவை, பழக்க வழக்கங்கள் என்ன என்பவற்றை ஆராய்வதற்கு இவை இடந்தரா. இவற்றைப் படிப்பதால் அல்லது கேட்பதால் விளையும் பக்தி, சிரத்தை, ஈசுரபுத்தி முதலிய அர்த்தவாதப் பயன்களே சொல்லப்படுகின்றன. இதனால் மனம்பரிசுத்தமாகிக் களங்கமற்ற படிகம்போன்று விளங்கும். பிறவா நெறி எய்த இது பெரும் வித்தாகவுள்ளது.

## வேடன் கதையின் அத்யாத்மக்கருத்து

புராணங்களில் சொல்லப்படும் வேடன் சிவராத்திரி விரதம் அனுஷ்டித்து முத்தியெய்தினன் என்பதன் பொருள் இனிக்கூறப்படும். வேடன்—சிற்றறிவுள்ள ஜீவாத்மா; உலகம்—அரண்யம்; இருள் மூடுதல்-களைத்துப் போதல்; பட்டினி—இந்திரிய நிக்கிரகம்; துஷ்டமிருகங்களுக்குப் பயப்படுதல் - காமக்குரோதியான பகைகளுக்குப் பயப்படுதல்; மரம் — அபயமளிக்கும் வைராக்யமெனும் மரம்; இரவில் கண்விழித்தல்-அஞ்ஞான இருளில் அஜாக்ரதையாக இராமல் விழித்திருத்தல்; மான்—இந்திரிய விஷயம்; வேட்டையாடுதல் — புலன் மூலமாகச் சிருஷ்டியை அனுபவித்தல்; மூவிலை வில்வம்-சத்துவ, ராஜச, தாமத குணங்கள். தன்னையறியாமல் வில்வம் தீர்த்தம் கீழிருக்கும் சிவலிங்கத்தின் மீது வீழ்வது, இவன் வைராக்கியத்தில் அயராது நின்று ஸ்திரப்படுவது. இதனால் முக்தி கைகூடும்.

## முடிபு

இச்சிவராத்திரி விரதத்தை பாஹ்யமாகவும் அந்தரங்கமாகவும் எங்ஙனம் அனுஷ்டிக்கவேண்டும் என்பதைத். தொகுத்துக் கூறியுள்ளோம். தற்காலத்தில் பாஹ்ய பூசையின் மேன்மையை உணராது கண்டிப்பவ பவரும் உளர். அறியாமையினால், 'தாங்கள் பிடித்த முயலுக்கு மூன்றே கால்கள்' என்று சாதிப்பவர்,"தங்கள் தங்கள் விருப்பின்படி ஏதாகினும் ஒன்றையே பெரிதென வாதாடுகின்றனர். மற்றவர்கள் நின்று ஒழுகும் மார்க்கங்கள் இழிந்தன எனவும் பூசலாடித் தீங்கை உண்டு பண்ணுகின்றனர். மேல் நாட்டு முறையில் கல்வி கற்ற சிலரும், உலோகாயத ஆசுர மனப்பாங்குள்ள வேறு பலரும்

தேவாலயம், விக்கிரகாராதனை முதலியவை, ஒரு சாராரின் தந்நலத்திற்காக ஏற்படுத்தப்பட்ட சூழ்ச்சிகள் என்றும் வீண் விதண்டாவாதம் புரிகின்றனர். மெய்ஞ்ஞான நூல்களில் விக்கிரகாராதனையே எல்லாவற்றிற்கும் மேலானது என்று சொல்லப்படவில்லை; எவ்விதக் குறுகிய நோக்கத்துடனும் யாதும் சொல்லியிருப்பதாகவும் காணப்படவில்லை. ஆன்ம பரிபக்குவத்துக்கும் இஷ்ட ருசிக்கும் இயைந்தவாறு ஏதாகினும் ஒரு மார்க்கத்தைக் கடைப்பிடித்துச் சாதனை பயின்றால் மேலான பதவி அடையலாம் என்பதே நூலோரது கருத்து. இதுவே இஷ்ட நிஷ்டையென்பது.

மேல் கூறிப்போந்த சில வீண் வாதங்கள் போன்ற குழப்பங்கள் யாவும் ஸ்ரீராமகிருஷ்ண தேவரின் சரிதத்தைச் சற்று ஆராய்வதால், சூரியனைக்கண்டபனிபோல் நீங்கும். அவர் தம் இஷ்ட தெய்வமாகிய காளிதேவியை கோவிலுள் அமர்ந்துள்ள விக்கிரக ரூபத்தின் மீது அல்லும் பகலும் அன்போடும் ஆர்வத்தோடும், பூசாவிதி முறைப்படியும் அநுஷ்டித்தார். பக்தி, ஞானம், யோகம், தர்மம் என்ற எல்லாத் துறைகளின் வழியாகவுமிறங்கி அவ்வவற்றிற்குள்ள சாதனை யென்னும் நீர் விளையாடலில் ஈடுபட்டு, எல்லாத்துறைகளால் அனுஷ்டிக்கப்படும் சாதனைகள் யாவும் ஒரே பேரின்ப சாகரத்துக்குரிய மார்க்கங்கள் என்று அநுபவத்தால் அறிந்தார். இது மட்டுமா, அவர் சிவராத்திரி விரதமிருப்பார், தேவி உபாசனை விரதங்களில் மூழ்குவார், வைஷ்ணவ விரதங்களை அநுஷ்டிப்பார். எவ்வித பேத புத்தியுமின்றி எல்லாவற்றையும் ஊக்கத்தோடும் சிரத்தையோடும் அநுஷ்டிப்பார். மேலும், புறச்சமயங்கள் எனச்சிலரால் கூறப்படும் கிறிஸ்தவ, மகம்மதிய சமய சாதனைகளையும் முறையோடும் ஆர்வத்தோடும் சிரத்தையோடும் கடைப்பிடித்து, அவையும் அந்தப் பேரின்பநிலைக்கே கொண்டு செல்வனவாம் என்றும் கூறியிருக்கின்றார். இதற்குச்சான்றாக அவர் கூறும் உபதேச மொழிகளில் ஒன்று இரண்டு இங்குத் தருவோம்:

'தேனீயானது, புஷ்பத்தின் உள்ளே இருக்கும் தேனை அடையாமல் இதழுக்கு வெளியே இருக்கும் வரையில் ரீங்காரம்பண்ணிக்கொண்டு பூவைச் சுற்றிச்சுற்றி வரும்; ஆனால், பூவுக்குள் நுழைந்து விட்டால்; சப்தம் செய்யாமல் தேனைக் குடிக்கிறது. கொள்கைகளையும் சித்தாந்தங்களையும் பற்றி ஒருவன் சண்டையிடும் வரையில் அவன் உண்மைப் பக்தியாகிய அமிர்தத்தைச் சுவை பார்த்தவனல்லன். ஆனால், அவன் அதை வாஸ்தவத்தில் ருசி பார்ப்பானானால், வெகு சாந்தனாய் மனச் சமாதான முடையவனாவான்.

'ஒருவன் சந்தைக்கடைக்கு வெகு தூரத்திலிருக்கும்போது உருத்தெரியாத "ஹோ" என்ற சப்தத்தை மட்டும் கேட்கிறான். ஆனால், அவன் சந்தைக்குள் நுழைந்தவுடன், ஒருவன் உருளைக்கிழங்குக்கும் மற்றொருவன் கத்தரிக்காய்க்கும் இம்மாதிரியாக மனிதர் பேரம் பண்ணுவதை ஸ்பஷ்டமாகக் கேட்கிறான். ஒருவன் ஈஸ்வரனிடமிருந்து வெகு தூரத்துக்கப்பாலிருக்கும் வரையில் அவன் குழப்பத்திலும், காரண காரியவாதப் பிரதிவாத அமளியிலுமே இருப்பான். ஆனால் அவன் ஈஸ்வரனை நெருங்குங்கால் காரணகாரியவாதம் வாதப் பிரதிவாதம் எல்லாம் நின்றொழிகின்றன. அவன் தெய்வீக இரகசியங்கள் எல்லாவற்றையும் வெகு தெளிவாயும் ஸ்பஷ்டமாயும் அறிந்து கொள்ளுகிறான்.'

ஆதலால், அன்பர்கள் எந்தெந்த விரதங்களையோ, பூஜைகளையோ அல்லது சாதனைகளையோ இயற்றினாலும் அவைகளை சிரத்தை, விசுவாசம், பக்தி, ஆர்வம் முதலிய மனப்பாங்குடன் செய்தல் வேண்டும். இங்குக் கூறப்பட்டது மகாசிவராத்திரியே யாயினும், ஆங்காங்கு சில முக்கிய கருத்துக்களை யுடைய உறுப்புக்கள் பொதுவாக இருப்பதைக்காணலாம். இவை பொதுவாக எல்லா வழிபாட்டினருக்கும் உடன்பாடாம். இதையோர் நிமித்தமாகக் கொண்டு சில பொதுவான உண்மைகளைக் கூறியிருக்கின்றோம். ❖

நன்றி: ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்.

ஸ்ரீ பிரஸன்ன வரதராஜப் பெருமாள் (மோகினி அவதாரம்)- சேலம் டவுன்.
திரு. பி. கே. சுந்தரராஜன்-சேலம்.






திருமலை திருப்பதி தேவஸ்தானம்

## ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

### ஸேவைகள் (ஸேவிப்பது மாத்திரம்)

| | | |
|---|---|---|
| சிறப்பு நுழைவு தரிசனம் | ரூ. | 25 |

### கைங்கர்யங்கள் (செய்து வைப்பது)

| | | |
|---|---|---|
| ஆமந்த்ரணோத்ஸவம் | ,, | 200 |
| திருமஞ்சனம் | ,, | 500 |
| கம்பூராக் கிண்ணி | ,, | 300 |
| புனுகுசட்டம் கிண்ணி | ,, | 200 |
| கஸ்தூரிக் கிண்ணி | ,, | 100 |
| ஜாபாராக் கிண்ணி | ,, | 100 |
| ஸஹஸ்ர கலஸாபிஷேகம் | ,, | 2500 |
| திருப்பாவாடை | ,, | 5000 |
| கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ,, | 1745 |
| ஸகஸ்ர தீபாலங்கார ஸேவை | ,, | 2000 |

### உத்ஸவக் கட்டணங்கள்

| | | |
|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ,, | 2500 |
| பிரம்மோத்ஸவம் | ,, | 750 |
| கல்யாண உத்ஸவம் | ,, | 1500 |
| ஊஞ்சல் சேவை | ,, | 1000 |
| தெப்போற்சவம் | ,, | 1500 |

### வாஹன சேவைகள்

முதல் வகை

| | | |
|---|---|---|
| தங்க கருட வாஹனம் | ரூ | 125 |
| கல்பவிருக்ஷ வாஹனம் | ,, | 125 |
| சூர்யபிரபை வாஹனம் | ,, | 125 |
| ஸர்வபூபால வாஹனம் | ,, | 125 |

(ஒவ்வொரு டிக்கெட்டிற்கும் 3 நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

இரண்டாம் வகை

| | | |
|---|---|---|
| வெள்ளி கருடவாஹனம் | ரூ | 100 |
| சிறிய சேஷ வாஹனம் | ,, | 100 |
| ஹம்ஸ வாஹனம் | ரூ. | 100 |
| ஹனுமந்த வாஹனம் | ,, | 100 |
| கஜ வாஹனம் | ,, | 100 |
| குதிரை வாஹனம் | ,, | 100 |

(ஒவ்வொரு டிக்கெட்டிற்கும் 3 நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

### பிரஸாதங்கள் (கால் சோலா தளிகை ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| தத்யோதனம் | ,, | 75 |
| புளிஹோரை | ,, | 75 |
| பொங்கல் | ,, | 100 |
| சர்க்கரைப் பொங்கல் | ,, | 100 |
| ஸாகர்பாத் | ,, | 125 |
| கேஸரிபாத் | ,, | 125 |
| பாயஸம் | ,, | 125 |
| சீரா | ,, | 200 |

### படிகள் (படி ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| லட்டு | ,, | 600 |
| வடை | ,, | 350 |
| போளி | ,, | 250 |
| தோசை | ,, | 250 |
| ஸுகியம் | ,, | 250 |
| ஜிலேபி | ,, | 600 |
| அப்பம் | ,, | 250 |
| தேன்குழல் | ,, | 250 |

### நித்திய ஸேவைகள் (ஆண்டொன்றுக்கு)

| | | |
|---|---|---|
| நித்திய கற்பூர ஹாரத்தி | ,, | 150 |
| நித்திய நவநீத ஹாரத்தி | ,, | 400 |
| நித்திய அர்ச்சனை | ,, | 200 |
| நிரந்தர கற்பூர ஹாரத்தி | ,, | 3000 |
| நிரந்தர நவநீத ஹாரத்தி | ,, | 8000 |
| நிரந்தர நித்ய அர்ச்சனை | ,, | 4000 |

செயலாட்சித் தலைவர்,
திருமலை திருப்பதி தேவஸ்தானம்,
திருப்பதி 517501.

ரூ. 200/-க்கு கிடைக்கும் அமந்த்ரணோற்சவத்திற்கு இரு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர். ரூ. 25/-க்கு கிடைக்கும் சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட்டுகள் நாட்டிலுள்ள ஆந்திரா வங்கியின் சில குறிப்பிட்ட கிளை அலுவலகங்களில் விற்பனைக்குக் கிடைக்கும்.

(ஆ-ர்)

# திருவயலூர் சிறப்பு

டாக்டர். ஜி டி. கோபாலகிருஷ்ண நாயுடு,
கோயம்புத்தூர்.

## திருவயலூர்

திருவயலூர், ஞானம் விளையும் புனித க்ஷேத்திரம். வயலூர் வள்ளல் சுப்பிரமணிய சுவாமியின் வற்றாத கருணை வளத்தை வாசகர்கள் அநுபவிக்க, இக் கட்டுரைத் துணைபுரியுமெனக் கருதுகிறோம்.

எல்லா உயிரும் இறைவன் ஆலயம். அனைத்துயிரிலும் மறைந்திருக்கும் அருவத் திருமேனிக்கு, உருவத் திருமேனி அமைத்தவர் ஞானியர். தெய்வத் தலங்களில், இளமை, அழகு, வீரம், ஞானம் இவைகளைக் கொண்டது திரு முருகனது மூர்த்தம்.

செந்நெல் வயல்களுக்கு நடுவே அமர்ந்தார், வயலூர் முருகன். ஆதிநாதரும், ஆதிநாயகியும், பொய்யாக் கணபதியும் கொண்ட திருவயலூர் அடைகின்றோம். பக்தி, முக்தி, சித்தி, சிந்தனை, கலை, கற்பனை, ஊக்கம், உற்சாகம், ஒழுக்கம் முதலியன ஒருங்கே ஊட்டும் திருவயலூர் திருத்தலத்தில் நாம் நிற்கின்றோம்.

## சரித்திரச் சாயல்

சோழமன்னர்களின் தலைநகராக உறையூர் மிளர்ந்த காலம். வன விலங்குகள் விவசாயப் பயிர்களுக்குச் சேதம் விளைவித்தன. இப்பொழுது அமைந்த வயலூர் அருகில் சோழ மன்னன் ஒருவன் வேட்டையாடிக் களைத்த தாகப் பெருக்கினால், கரும்பு ஒன்றை ஒடித்துத் தாகவிடாய் தீர்க்க எத்தனித்தான். ஒடித்த கரும்பில் உதிரம் கசிந்ததைக் கண்ணுற்றுத் திடுக்கிட்டான். கரும்பைத் தோண்டவே, சிவலிங்கம் இருப்பதைக் கண்டு மகிழ்வெய்தி, அங்கேயே திருக்கோயில் அமைத்து, பக்தியுடன் இறைவனை வழிபட்டான். அரசனது குடிகளும், "அரசன் எவ்வழி குடிகள் அவ்வழி" எனக் கோயிலுள்ள மூர்த்தியை வழிபட்டனர்.

## திருநாமங்கள்

ஆதிநாதர் அருளால், சுயம்பு மூர்த்திக்கு 'விடங்கர்' என்ற திருநாமம் ஏற்பட்டது. ஆதிநாயகனுக்கு அக்னீஸ்வரன் எனவும், மகாதேவன் என்னும் பெயர்கள்வழங்கப்பட்டன. தன்னை அண்டியவர்களை மறவாமல் காப்பாற்றி வந்ததால், அவருக்கு மறப்பிலி நாதர் எனவும் அடியார்கள் போற்றினார்கள். பராசக்திக்கு ஆதிநாயகி என்றும், முன்னிலை நாயகி என்றும் பெயர்கள் அமைந்தன. அம்மன் சந்நிதி தென்முகம் நோக்கியுள்ளது.

சோழமன்னன் காலமும் நெருங்கிற்று; அவன் முக்தியடைந்தான்.

பிறகு உறையூரை ஆண்ட கேசரி வர்மன், இராஜேந்திரசோழ தேவன், முதலாம் இராஜராஜ சோழன் முதலிய மன்னவர்கள் வயலூர் கோயிலைப் போற்றி நிலம், பொன் அருளி ஆதரித்து வந்தனர்.

## தனிச்சிறப்பு

வயலூர் முருகப்பெருமான் தன் தந்தையாரையும், தாயையும் முன்னிருத்தி, அன்னாடம் தாய் தந்தையர் கழல் பணிந்து, பூசனை புரிந்து அருள்பெற்ற பாலகராகக் காட்சி தருகிறார். ஆதலால் இவருக்குக் குமாரபூஜித நாதர் எனவும் பெயர் வழங்கப்படுகிறது. வயலூரில் முருகப் பெருமான் தெய்வகுஞ்சரி வள்ளியோடு சேர்ந்து, பூசனை செய்கின்ற தனிச்சிறப்புப் பெற்றுத் திகழ்கின்றார். வயலூரில் அம்மை அப்பரை சககுடும்ப தர்ம பத்தினிகள் சமேதராக முருகப் பெருமான் பூசை செய்கிறார் என்பதே வயலூர் பதியின் சிறப்பு.

## திருப்புகழ் போற்றும் திருவயலூர்

முருகன் புகழ் பாடிய வித்தகர் அருணகிரிநாதர். கருத்துகள் பல கொண்ட அருணகிரியார் தலந்தோறும் சென்று ஆங்காங்குள்ள மூர்த்திகளை மனங்குளிர அநுபவித்து வந்தார். அறுநூறு ஆண்டுகளுக்கு முன் அவதரித்த அருணகிரியார் சிவம் விஷ்ணு இரு கடவுள்களையும் பாடிப் பரவசமடைந்த பெரியார். திருப்புகழ் நிறைவு பெற, இறைவன் அருள் பாலித்த இடம் வயலூர். முருகனால் அழைக்கப்பட்டு, தேங்கிக்கிடந்த தெய்வ நலத்தைத் திறந்துவிட்டுப் 'பாடு' என்று அருள் சுரந்த இடம் வயலூரே. அருணகிரிநாதர் பல நாட்கள் தங்கி, முருகப்பெருமான் சந்நிதியில் நின்று, பாடிப் பரவசம் அடைந்த இடம், திருவயலூர் திருக்கோயிலாகும்.

திருவயலூரில் அமர்ந்த பொய்யாக் கணபதியை, அருணகிரியார் உளமுருகிப் பாடிப் போற்றும் செய்யுள் இதுவே:

"கைத்தல நிறை கனி அப்பமொ
டவல்பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணி......"

பொய்யாக்கணபதிப் பெருமான் அருளால், அருணகிரி சுவாமிகள் வயலூர் முருகப் பெருமானைப் பாடும் அற்புதத்தைஅநுபவிப்போம், இதனடியில்:

"தொந்த நோயை என்னாலெசிக்கவும்,
என்னால் நினைக்கவும், என்னால்
தரிக்கவும்,
—இங்கு நானார்?"

என அநேக செய்யுட்கள் அருணகிரியார் வாக்கிலிருந்து புலப்பட்டன. கால வெள்ளத்தில் மறைந்த அநேக பாடல்களில், வயலூர் பற்றிய திருப்புகழ் பாடல்கள் பதினெட்டே மிஞ்சி

நின்றன. அருணகிரி சுவாமிக்கு அருள் தந்து, திருப்புகழ் பாடும் திறம் தந்தவர் பொய்யாக் கணபதி. பொய்யான வாழ்வை நம்பி, பூமியில் திரிபவனை மெய்ஞான பாதைக்குத் திருப்பி அனுக்கிரகம் செய்தவர் பொய்யாக் கணபதி. இவரிடம் சற்றுச் செல்வோம்.

## பொய்யாக் கணபதியார்

கணபதி கையில் வைத்திருப்பது விளாங்கனி. ஸ்தூலம், சூட்சுமம் ஆகிய தேகம் நமக்குண்டு. பொய்யான ஸ்தூலம் உண்மை உணரும் போது விடுபட்டு, ஓடு மாதிரி ஆகின்றது. மற்றும், அழியாத சூட்சும உடல் பொய்யான காயத்தை விட்டு ரசம் நிறைந்ததாக அமைகின்ற தத்துவத்தை விளக்க, விளாங்கனியையே கையில் நிறைகனியாக வைத்திருக்கிறார். விளாங்கனியே நிறை கனி. இந்நிறைகனியைப் பற்றியே அருணகிரியார்,

'' கைத்தல நிறை கனி''

எனப் போற்றி, நம்மைப் பரவசப் படுத்துகிறார்.

தீராத வினை தீருமிடம் வயலூர்; அறியாமல் செய்த பாபம் அகற்றுமிடம் வயலூர்; அன்னை தந்தையரை வழி பட்டுப் பேறு பெற அறிவுறுத்தும் தலம் வயலூர்; திருப்புகழ் தந்த இடம் வயலூர். பற்பல ஸ்தலங்களில் பாடிய பாடல்களில் வயலூர் முருகனை வைத்து வழிபட்ட அருணகிரி சுவாமிகளின் சில செய்யுட்களைக் கீழே காண்போம்:

சிராப்பள்ளியைப் பாடுகின்ற பொழுதில், இறுதியில் வயலூரை அமர்த்துகின்றார் :

'' அமரர் முதலன்பர் மூனிவர்கள் வணங்கி
அடிதொழ விளங்கும்...வயலூரா!''

பழனியைப் போற்றிப் பாடிய பாடல் :

'' பருத்த தோகையில்வரு முருகோனே
பரக்கவே யியல்தெரி......வயலூரா!''

வயலூரையே பாடும் கம்பீரத்தைக் காண்போம் :

'' ஏழ்தலம் புகழ் காவரியால் விளை
சோழ மண்டல மீதே மனோகரா
ராஜ கெம்பீர நாடாளு நாயக,
வயலூரா !''

திருச்செந்தூர் சென்றார்; அங்கு அம்முருகனைப் பாடும்பொழுது, வயலூர் நினைவு கிட்டுகின்றது.

'' குறவர் தங்கள் பிரானே மாமரம்
நெறு நெறென் றடிவேரோடே நிலை
குலைய வென்றிகொள் வேலே ஏவிய
வயலூரா !''

திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் கரூர் ஒருமுக்கியத்தலம். வைணவமும் சைவமும் தாண்டவமாடிப் பாடல் பெற்ற இடம். சித்தர்களில் ஒருவராகிய கருரார் ஐக்கியமான தலம். கரூரின் மகிமையைக் கண்டார் அருணகிரியார். அங்கும் வயலூரை மறக்கவில்லை:

'' அகிலாக வித்தகனே துகலிற்றவர்
வாழ் வயலித்.........திருநாடா''

இன்னும் ஏனையத் தலங்களை தரிசித்து, ஆங்காங்கு வீற்றிருக்கும் பெம்மான்களைப் பாடும்பொழுது, 'வயலூரானே' என, ஒவ்வொரு முறையும் பாடி முடிக்கிறார், அருணகிரி சுவாமிகள்.

அருணகிரியார் சரணாகதி தத்துவத்தை உலகுக்குரைக்கிறார். தன்னைப் பிறப்பித்து, அனைத்தும் ஈந்து, கல்வியில்லாத தன்னை முருகன்பால் அமைத்து, அவனை நினைத்து, அவனைத் துதிக்க மனத்தை ஒரு நிலையில் நிறுத்தித் தனக்கு வழி காட்டித் தன்னை நடத்துகின்ற இறைவன், வயலூரில் திருக்கோயில் கொண்டிருக்கும் முருகப்பிரானே, எனக் கூறுகின்றார். தன்னை இழுத்து, தனித் தமிழ்த் திருப்புகழாகப் பாடிப் பரவசமடையச் செய்த வயலூரானை என்றென்றும் மறக்க மாட்டேன் எனப் பறைசாற்றுகின்றார்.

வயலூர் முருகனைப் பாடிய செய்யுட்களில் சிலவற்றை வசனமாக வாசகர்கள் முன் வைப்போம்.

'தேவேந்திரன் திருமகளார் குஞ்சரி தேவியும், குறமகளார் வள்ளி நாயகியும் கொண்ட வேலேந்திய வேலாயுதனே! அடியார்களுக்கு அருள் செய்வதிலே வாக்குத் தவறாத வள்ளலே! பொல்லாக் கணபதி வாழும் கோயிலுடைய வயலூரானே! திருக்கோயிலில் ஒளியுற விளங்கும் முருகப் பிரானே! என வயலூர் திருப்புகழில் பாடல்கள் நம்மை உருக்குகின்றன.

'கிருஷ்ணவதாரத்தில் ஆச்சியர் உரலொடு கட்ட, சாபத்தால் மருத மரங்களாக இரு கந்தர்வர்கள் நிற்க, அவர்கள் சாபம் தீர்க்க வந்த அரியின் மருகோனே! இரு மருத மரத்திடை உரலை இழுத்து, மரம் ஒடிபட உரலொடு தவழ்ந்தவரே'

'விராலிமலை மீது அமர்ந்த அறுமுகனே! செந்நெல் வயல்களுக்கு மத்தியில், வயலூர் ஆலயத்தில் அதிபனாகக் கொலுவமர்ந்து, அருள் தருகின்ற கருணைக்கடவுளே! முருகா' என்று உணர்வு பொங்க, அருணகிரியாரின் வாக்கிலிருந்து திருப்புகழ் வருகின்றது.

'அமராபதியில் வாழ்கின்ற தேவர்களுக்குத் தேவனாக விளங்கும் திரு முருகா! எம்போன்ற எளியவர்க்காக வல்லவா வயலூர் பதியில் கொலு அமர்ந்து, விளங்குகிறாய்' எனப் போற்றித் துதிக்கின்றார், அருணகிரி சுவாமிகள்.

'திருச்சங்கோடுநாடு தனக்கும், காவிரிசூழ் வயலூருக்கும் பிரியமானவனே! காலன் ஆடல் தவிர்க்கும் பெருமான் நீயே அல்லவா?' என பக்தியுடன் வினவுகிறார்.

'வயலூர் வாழ்கின்ற அற்புதனே! வினையின் தொடர்பை அறுத்திடும் வேலாயுதனே!' எனப் போற்றித் துதிக்கின்றார், அருணகிரி நாதர்.

(அடுத்த இதழில் முடியும்.)

# இராசி பலன்

Dr. டி. அர்க்கசோமயாஜி, M.A., Phd.
திருப்பதி.

(1-3-81 முதல் 31-3-81 வரை)

## மேஷம்

(அசுவனி, பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய)

இவ்ராசிக்காரர்கள் இம்மாதத்தின் முதல் 15 நாட்களின் போது மிக மகிழ்ச்சியுடன் விளங்குவர். மேலும் பணவரவு, மதிப்புயர்தல், உடல்நல மேன்மை, நல்ல நண்பர்கள், கேளிக்கைகளில் ஈடுபடல். மாதத்தின் இரண்டாவது பகுதியின் போது சிறிது பணவரவு. நல்ல காரியத்திற்காகப் பணம் செலவழிக்கப்பட்டாலும், சிறிது பணம் வீண் செலவினங்களுக்காகச் செலவிடப்படும். மாதத்தின் இறுதி நாட்களின்போது வெளியிலிருந்து ஏற்படும் கருத்து வேறுபாடுகளுக்குள்ளாவதோடு, மனைவிக்கு மனமகிழ்ச்சியின்மையும் உண்டாகும். 4, 5, 6, 10, 11, 14, 15, ஆகிய தேதிகளில் நல்லன நடைபெறும்.

## விருஷபம்

(கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய)

வெற்றி, பணவரவு. மாதத்தின் இரண்டாம் பகுதியின் போது பண விஷயத்திலும் மற்றும் பல விஷயங்களிலும் நிம்மதியுடன் விளங்குவர். விருந்தினர் வருகை, பெரியோர்களது பாராட்டுதல்களுக்குள்ளாதல் மற்றும் புதிய நட்புறவுகள், கேளிக்கைகளில் ஈடுபடல். 6. 7, 8, 12, 13, 21, 22, 23 ஆகிய தேதிகள் நல்லனவாகும்.

## மிதுனம்

(மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய)

இம்மாதத்தின் இரண்டாம் பகுதியின் போது பணவரவு, முயற்சிகள் வெற்றியடைதல். எனினும் உற்றார் உறவினரிடமிருந்து பிரிவு ஏற்படல். உறவினர்களால் சிறிது மனக்கவலை. சத்காரியங்களில் ஈடுபடல் அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் கிடைக்கப் பெறல். 7, 8, 9, 10, 11, 14, 15, 18, 19, 25, 26 ஆகிய தேதிகள் நல்லனவாகும். 23, 24 தேதிகளில் பிரயாணம் மேற்கொள்ள நேரிடும்.

## கடகம்

(புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய)

கேளிக்கைகளில் ஈடுபடல், புதிய ஆடை ஆபரணங்கள் கிடைக்கப் பெறல். மற்றும் எப்போதாவது பிரயாணம் மேற்கொளல். சமய நடவடிக்கைகளில் ஈடுபடல். எனினும் சில தீய எண்ணங்கொண்டோரால் கவலைகளுக்குள்ளாவதோ அல்லது கருத்துவேறுபாடுகளுக்குள்ளாவதோ நேரிடக்கூடும். எனினும் இவற்றையெல்லாம் சமாளிக்கும் சூழ்நிலைகளுக்குள்ளாகி, வெற்றியும் அடைவர். 4, 5, 10, 11, 12, 13, 17, 18, 21, 22 ஆகிய தேதிகளில் நல்லனவாகும்.

## சிம்மம்

(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

முதல் வாரம் நன்மை பயப்பினும், மாதத்தின் முதல் 15 நாட்களின் போது அவ்வப்போது பிரயாணம் மேற்கொள்ள நேரிடும். மற்றும் சிலருடன் கருத்து வேறுபாடு கொள்ளவும் நேரிடும். மாதத்தின் இரண்டாம் பகுதியின் போது சிறிது உடல்நலம் கெடல் அல்லது மனைவிக்கு மன மகிழ்ச்சியின்மை. 19-ம் தேதிக்கு முன்பு பெண்கள் மூலமாக சிறிது கவலைக்குள்ளாதல். அதன் பிறகு புதிய ஆடை ஆபரணங்கள், கேளிக்கைகளில் ஈடுபடல். 3, 4, 12, 13, 14, 15, 18, 19, 23, 24 ஆகிய தேதிகள் நல்லனவாகும்.

## கன்னி

(உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய)

மாதத்தின் 2-ம் பகுதியின் போது பிரயாணம், மனைவிக்கு மனமகிழ்ச்சியின்மை. பெண்கள் மூலமாக கவலைக்

குள்ளாகலாம்: ஆகவே முதல் 15 நாட்களின் போது நல்லனவும் மதிப் புயர்தலும் உண்டாகும். நல்ல சமயத் தில் நல்ல காரணத்திற்காக பணம் செலவிடப்படும். எனினும் ஏதாவ தொரு காரணத்திற்காக மனக் கவலைக்குள்ளாதல். 5, 6, 7, 8, 14, 15, 16, 17, 20, 21 ஆகிய நாட்கள் நல்லனவாகும்.

### துலா

(சித்திரை 3-ம்பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய)

முதல் வாரத்தின் போது பிள்ளை கள்அல்லது புதல்வியர் காரணமாகக் கவலைக்குள்ளாதல். ஆயினும் பண வரவு. ஒப்பிட்டுப் பார்க்கையில் மாதத்தின் 2-ம் பகுதி நல்லதாக அமையும். ஒருவர் சிறிது கருத்து வேறுபாடுகளுக்கோ அல்லது உடல் நலக் குறைவால் மனக்கவலைக் குள்ளாகலாம். எனினும் மொத் தத்தில் 14-ம் தேதிக்குப் பிறகு பணவரவு, வெற்றி, மதிப்புயர் தல். 1, 2, 8, 9, 10, 11, 17, 18, 19, 20 ஆகிய தேதிகள் நல்லன வாகும்.

### விருச்சிகம்

(விசாகம் 4-ம் பாதம் முதல், அனு ஷம், கேட்டை முடிய)

பணவரவு, வெற்றி, நண்பர்கள். முதல் வாரத்தின்போது தன்னுடைய தீய நடவடிக்கைகளின் காரண மாக அஞ்சுதல். பிறகு பிள்ளைகள் அல்லது புதல்வியர் காரணமாக மனக்கவலைக்குள்ளாதல். மாதத் தின் இரண்டாம் பகுதியின் போது கருத்து வேறுபாடுகள் அல்லது உடல் நலம் கெடல், விருந்தினர் வருகை மற்றும் அவர்களால் பாராட்டப் பெறல். முதல்வாரத்தின் போது வயிறு சம்பந்தப்பட்ட தொந்தரவு களினால் அவதியுறல் அல்லது உடல் நலம் சிறிது கெடல். மொத்தத்தில் பணவரவு மற்றும் தன்னம்பிக்கை யுடன் விளங்கல். 3, 4, 10, 11, 12, 13, 19, 20, 21, 22 ஆகிய நாட்கள் நல்லனவாகும்.

### தனுசு

(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய)

மாதத்தின் 2-ம் பகுதியின் போது சிறிது உடல்நலம் கெடல். முதல் வாரத்தின் போது பணவிஷயத்தில் நிலைமை திருப்திகரமாக அமையும். எனினும் தீய நடவடிக்கைகளில் பங் கேற்க நேரிட்டு அச்சத்திற்குள்ளாக நேரிடலாம். புதிய நட்புறவுகள் கொண்டு தன்னம்பிக்கையுடன்விளங் குவர். 1, 2, 5, 6, 12, 13, 14, 15, 23,24,25,26 ஆகியன நல்ல நாட்க ளாகும்.

### மகரம்

(உத்திராடம் 2-ம் பாதம் முதல் திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய)

ஒப்பிட்டுப் பார்க்கையில் மாதத் தின் இரண்டாம் பகுதி நல்லதாக அமையும். அதாவது பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள், எனி னும் சிறிது கருத்து வேறுபாடு களுக்குள்ளாதல். தீய நடவடிக்கை களில் பங்கேற்றாலும், மொத்தத்தில் குறிப்பிடும்படி எந்தவித மாற்றமும் வாழ்க்கையில் நிகழாது. மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பண நஷ்டம். 4, 5, 7, 8, 14, 16, 17, 23, 24, 25, 26 ஆகிய நாட்கள் நல் லனவாகும்.

### கும்பம்

(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதை யம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய)

தவறான ஆலோசனையைக் கேட்ப தனால் பணநஷ்டம். கருத்து வேறு பாடுகள் அல்லது அலுவலகக்கவலை கள் அல்லது வீட்டில் திருடு போதல் அல்லது பிரயாணம் ஆகிய காரணங் களால் மனயமைதியிழத்தல். உற்றார் உறவினருடன் ஒரு சிலருக்கு பிரிவு ஏற்படலாம். மனயமைதிக்காக ருத் ராபிஷேகம் செய்வது உசிதம். 19ம் தேதிக்குப் பிறகு நல்லன நடை பெறும். 26, 27, 28, 29 ஆகிய தேதிகள் நல்லனவாகும்.

### மீனம்

(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்தி ரட்டாதி, ரேவதி முடிய)

இம்மாதத்தின் போது எப்போதா வது பிரயாணம் மேற்கொள்ள நேரி டும். எனினும் கேளிக்கைகளில் ஈடு படுவர். வீண் செலவினங்கள் ஏற் படல் பணம் விஷயம் பொறுத்த வரை முதல்வாரம் நன்றாகஅமையும்: பிறகு மனைவிக்கு மன மகிழ்ச்சியின் மை. தீய எண்ணங்கொண்டோரால் மதிப்புக்கெடல். இறைவழிபாட்டி னால் மனயமைதி கிடைக்கும். 19, 20, 21, 22, 28 ஆகிய நாட்கள் நல் லனவாகும்.



## சந்தாதாரர்களுக்கு....

30-4-81 ம் தேதியுடன் சந்தாக் காலம் முடிவடையும் சந்தா தாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. தொகை அனுப்ப வேண்டிய முகவரி: The Welfare Officer, Publication Section T. T. D., TIRUPATI. T

55, 61, 63, 67, 74, 102, 112, 226ஏ, 350, 377, 382, 389, 391, 580, 619, 627, 696, 714, 748, 756, 772, 1472, 1535, 1537, 1538, 1551, 1552, 1600, 1602, 2717, 2718, 2722 முதல் 2738 வரை, 2740, 2741, 2743 முதல் 2756 வரை, 2758, 2759, 2760, 2762 முதல் 2766 வரை, 2768 முதல் 2773 வரை, 2775 முதல் 2825 வரை, 2828, 2834, 2844 முதல் 2855 வரை, 2882, 2883.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER. T. T. D. PRESS, TIRUPATI-517501.

# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை

## தினசரி பூஜைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

**சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில்:**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன
3-45 முதல் 4-30 வரை ; தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலுக்குள் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை,(தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் மதியம் 12-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம் : 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, ஏகாந்தம், 2வது மணி.
1-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**
1-00 முதல் 7-00 வரை: சர்க்கார் மற்றும் ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜித பிரம்மோற் சவங்கள், வாகனசேவைகள், ஊஞ்சல்சேவை முதலியன (சர்க்கார் மற்றும் ஆர்ஜித தெப் போற்சவங்கள் செவ்வாய்க்கிழமைகளில் மட்டுமே,
இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், (ஏகாந்தம்) இரவு மணி
8-00 முதல் 12-00 (நடு இரவு) **ஸர்வதரிசனம்**
12-00 முதல் 12-30 வரை : சுத்தி,ஏகாந்த சேவைக் கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்த சேவை (தனி)

**புதன் கிழமைகளில (ஸகஸ்ர கலசாபிஷேகம நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.
3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை, (தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலஸாபி ஷேகத்திற்கான ஏற்பாடுகள்.
6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) 2வது மணி.
8-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்.**
மதியம் : 1-00 முதல் மாலை 6-00 வரை: சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன
இரவு : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன
8-00 முதல் நடுஇரவு 12-00 வரை **ஸர்வதரிசனம்.**
12-00 முதல் 12-30 வரை : சுத்தி,ஏகாந்தசேவைக் கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)

**வியாழக் கிழமைகளில் (ஆர்ஜித திருப்பாவாடை, பூலங்கி சேவை ஆகியவை நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன
3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை (ஸகஸ்ரநாம அர்ச்சனை (தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் 8-00 வரை : சாலிம்பு, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடை அலங்காரம், மணி முதலியன.
8-00 முதல் மாலை 6-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை : சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவம், ஆர்ஜித பிரம் மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன.
மாலை 6-00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், பூலங்கி சமர்ப்பணை, இரவுமணி முதலியன.
இரவு 8-00 முதல் 12-00 வரை : **பூலங்கி ஸர்வதரிசனம்**
12-00 முதல் 12-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக் கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)

**வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)
3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, நித்ய கட்டளை கைங்கர்யங்கள், காலை முதல் மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.
5-00 முதல் 7-00 வரை : அபிஷேகம் (தனி)
7-00 முதல் 8-30 வரை : சமர்ப்பணை முதலியன
8-30 முதல் 9-30 வரை : தோமால சேவை அர்ச்சனை (தனி)
9-30 முதல் 10-00 வரை : 2வது மணி, பலி, சாத்துமுறை முதலியன
10-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை : சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவம், ஆர்ஜித பிரம் மோற்சவங்கள், வாகனசேவைகள், சர்க்கார் மற்றும் ஆர்ஜித ஊஞ்சல் சேவை முதலியன,
இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள் இரவு மணி முதலியன.
8-00 முதல் இரவு 12-00 வரை **ஸர்வதரிசனம்**
12-00 முதல் 12-30 வரை : சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)

ஸ்ரீ வேங்கடேஸ்வர பரப்ரஹ்மணே நம:

## நீ ஓர் இந்து - அதற்காகப் பெருமைப்படு!
## பெருமை வாய்ந்த சரித்திரம் உனக்குள்ளது; அதனை மறவாதே!
## அரும்பெரும் தத்துவக்கருத்துக்களை அடிப்படையாகக் கொண்ட பேரியக்கம் இந்து சமயம்

உண்மையான ஓர் இந்துவாக செயற்படு — கீழ்வருவனவற்றைக் கடைப்பிடி

- உனக்கு விருப்பமான சமயக்குறியை (திலகம், சந்தனப்பொட்டு, விபூதி, நாமம்) நெற்றியில் இட்டுக் கொள்ளும் பழக்கத்தை மேற்கொள்.
- தினம் குறைந்தபட்சம் ஒரு முறையாவது ஸ்நானத்திற்குப் பிறகு இறைவனின் நாமத்தை ஜெபிக்கவும்.

<u>கீழே கொடுக்கப்பட்டுள்ள நாமங்களில் ஒன்றை அல்லது ஒருசிலவற்றையாவது தேர்ந்தெடு</u>

ஓம் ஸ்ரீ வேங்கடேசாய நம:

ஓம் நமோ பகவதே வாசுதேவாயா

ஓம் நமோ நாராயணா

நமசிவாயா

ஹரே ராம ஹரே ராம ராமராம ஹரேஹரே

ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ணகிருஷ்ண ஹரேஹரே

- தினந்தோறும் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதத்தின் குறைந்தபட்சம் 10 ஸ்லோகங்களை பாராயணஞ்செய்.
- வாரத்திற்கு ஒரு முறை உன் குடும்பத்தாருடன் உனக்கு விருப்பமான கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபடு.
- உங்கள் வீட்டிற்கு முன் 'ஓம்கார்' எனும் முத்திரையினை ஒட்டவும்.
- தினந்தோறும் பகவத்கீதையில் குறைந்தபட்சம் ஒரு ஸ்லோகத்தையாவது பாராயணஞ்செய்.
- சமுதாய சமய விழாக்களில் ஏதாவது ஒருவகையில் பங்கேற்றுக்கொள்.

---

**அவனை நம்பு - அவன் உன்னைக் காப்பான்**

---

## திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.